# ஆவணம்

இதழ் 3 சூலை 1993



தமிழகத் தொல்லியல் கழகம்

# ஆவணம்

இதழ் : 3 AVANAM 3 தூலை : 1993

## பொருளடக்கம்

# பதிப்புக் குறிப்பு

ஆவணம் இதழ் 2 வெளியாகி ஏறக்குறைய ஓராண்டு கழித்து இதழ் 3 வெளிவருகிறது. இடையில் ஏற்பட்ட சில எதிர்பாராத சிக்கலினால் உரிய நேரத்தில் இதழைக் கொண்டுவர இயலவில்லை. இனிமேல் இத்தகைய காலத் தாழ்வு ஏற்படாது என நம்புகிறோம். தமிழகத் தொல்லியல் ஆய்வுக் கழகம் இப்போது தமிழகத் தொல்லியல் கழகம் என்ற புதுப்பெயர் பெற்றுப் புத்துணர்ச்சியோடு செயற்பட்டு வருகிறது. இடையில் ஏற்பட்ட சிக்கலைக் கண்டு துவளாது தொல்லியல் கழகத்துக்கு முழு ஒத்துழைப்புத் தந்த நண்பர்கள் யாவருக்கும் என் நெஞ்சார்ந்த நன்றி.

இந்த இதழ் காரைக்குடியில் நடத்தப் பெறும் கருத்தரங்கில் வெளியாகிறது. தமிழகக் கல்வெட்டுக்கள் யாவற்றையும் தொகுத்து அச்சேற்றி வெளியிட வேண்டும் என்று பெரிதும் முயன்ற "கம்பன் அடிப்பொடி" திரு. சா. கணேசன் அவர்கள் பெருமுயற்சியில் நிறுவப்பட்ட கம்பன் மணிமண்டபத்தில் இது வெளியிடப் பெறுகிறது என்பது மிகவும் பெருமைக்குரியது. இதழ் முழுமைபெற ஒத்துழைப்பு நல்கிய கட்டுரையாளர்களுக்கும், பதிப்புக் குழுவினர்க்கும் நன்றி உரித்தாக்குகிறேன். அச்சேறுங்கால் முனைவர் கா. இராஜன், திரு. பா. ஜெயக்குமார் ஆகியோர் பலவகையிலும் முயற்சி எடுத்துக் கொண்டனர். இவ்விதழை அழகாக அச்சேற்றி உதவிய புதுக்கோட்டை சர்மா சானடோரியம் அச்சகத்தாருக்கு நன்றி.

இவ்விதழில் பல புதிய கல்வெட்டுக்களும் பட்டயங் களும் தொல்லியல் சார் கட்டுரைகளும் குறிப்புக்களும் வெளியாகின்றன. சில முற்றிலும் புதிய செய்திகளைத் தருவனவாகவும் சில தெரிந்த செய்திகளுக்கு மேலும் வலுவூட்டக் கூடியனவாகவும் அமைகின்றன. புதுக்கோட்டைப்

பகுதியிலிருந்து தொகுக்கப்பட்டுள்ள 'நிலத்தரசு' பட்டயங்கள் பெரும்பாலும் வரலாற்றாசிரியருக்குப் புதியவை. இவை 17-18ஆம் நூற்றாண்டுச் சமுதாய வரலாற்றுக்குப் புதிய ஒளியைக் கொடுக்கும் என எதிர்பார்க்கலாம். வரலாற்றாசிரியர் இவை போன்ற செப்புப் பட்டயங்களில் கவனம் செலுத்த வேண்டும். எதிர்பாராது வெளிநாடுகளில் கிடைத்த சில அரிய தமிழ்க் கல்வெட்டுக்களும் இவ்விதழில் இடம் பெறுகின்றன. எதிர்காலத்தில் மேலும் பல அரிய கண்டுபிடிப்புக்களை ஆவணம் ஏந்தி வரும் என்பதற்கு இவை முன்னோடியாக அமையும்.

தமிழகத் தொல்லியல் கழக உறுப்பினர் யாவரும் மேலும் பல வரலாற்று ஆர்வலர்களையும், ஆசிரியர்களையும் கழகத்தின் பக்கம் ஈர்த்துக் கழகத்தையும் ஆவணத்தையும் ஊக்கி வளர்க்க முயற்சிகள் மேற்கொள்ள வேண்டுகிறேன். புதிய செய்திகளைப் பற்றிய குறிப்புக்களும் கட்டுரைகளும் நிறைய அனுப்பி வளஞ்சேர்ப்பீராக. ஆவணத்தின் மேம்பாட்டுக்கான கருத்துக்களும் வரவேற்கப்படுகின்றன.

எ. சுப்பராயலு

தஞ்சாவூர்

*24.7.1993*

முன் அட்டையில் : கி.பி. ஐந்தாம் நூற்றாண்டு தமிழ்-வட்டெழுத்து முறை (பூலாங்குறிச்சி)

# கிரந்த எழுத்துக்களும் அவற்றிற்கு நிகரான தமிழ் எழுத்துக்களும்

| | | |
|---|---|---|
| அ | a | 𑌅 |
| ஆ | ā | 𑌆 |
| இ | i | 𑌇 |
| ஈ | ī | 𑌈 |
| உ | u | 𑌉 |
| ஊ | ū | 𑌊 |
| எ | e | |
| ஏ | ē | 𑌏 |
| ஐ | ai | 𑌐 |
| ஒ | o | |
| ஓ | ō | 𑌓 |
| ஔ | au | 𑌔 |
| ரு0 | ṛ, ṛi | 𑌋 |
| ளூ0 | ḷ̥ | 𑌌 |

| | | |
|---|---|---|
| க | k | 𑌕 |
| க$_2$ | kh | 𑌖 |
| க$_3$ | g | 𑌗 |
| க$_4$ | gh | 𑌘 |
| ங | ṅ | 𑌙 |
| ச | c | 𑌚 |
| ச$_2$ | ch | 𑌛 |
| | j | 𑌜 |
| ச$_4$ | jh | 𑌝 |
| ஞ | ñ | 𑌞 |
| ட | ṭ | 𑌟 |
| ட$_2$ | ṭh | 𑌠 |
| ட$_3$ | ḍ | 𑌡 |
| ட$_4$ | ḍh | 𑌢 |
| ண | ṇ | 𑌣 |
| த | t | 𑌤 |
| த2 | th | 𑌥 |
| த3 | d | 𑌦 |
| த4 | dh | 𑌧 |
| ந | n | 𑌨 |

| | | |
|---|---|---|
| ப | p | 𑌪 |
| ப$_2$ | ph | 𑌫 |
| ப$_3$ | b | 𑌬 |
| ப$_4$ | bh | 𑌭 |
| ம | m | 𑌮 |
| ய | y | 𑌯 |
| ர | r | 𑌰 |
| ல | l | 𑌲 |
| வ | v | 𑌵 |
| ழ | ḻ | |
| ள | ḷ | 𑌳 |
| ற | ṟ | |
| ன | ṉ | |
| ச$_0$ | ś | 𑌶 |
| | ṣ, sh | 𑌷 |
| | s | 𑌸 |
| | h | 𑌹 |

2,3,4 என்பன வர்க்க எழுத்துக்களை ஒலி பெயர்க்கக் குறிக்கப்பட்டுள்ளன. கிரந்தத்தில் கூட்டெழுத்துக்களாக வருபவற்றைப் பிரித்து தனித்தனி எழுத்துக்களாகக் கொடுக்கலாம்.

# 1. புடலூர் திருவனந்தீசுவரர் கோயில் கல்வெட்டுக்கள்

இல. தியாகராசன், அரியலூர்

தென்னார்க்காடு மாவட்டம் திட்டக்குடி வட்டத்தில் உள்ள சிற்றூர் ம. புடலூர் (மங்கலூரை அடுத்துள்ள புடலூர்) ஆகும். இங்குள்ள திருவனந்திசுவரர் கோயிலில் இதுவரை படியெடுக்கப்பெறாத 11 கல்வெட்டுக்கள் உள்ளன.* இக்கோயிலை இரண்டாம் இராசாதிராசனின் 8 ஆவது ஆட்சியாண்டில் (கி.பி. 1174) இருங்கோளப்பாடி நாட்டு வேட்பூருடையான் பெரியான் திருவனான இராசராச மிலாட குலராயன் என்ற அரசு அலுவலர் கட்டியுள்ளார். இக்கோயிலைக் கட்டிய சிற்பி தில்லைநாயக தச்சாசாரி என்பவராவர். இவ்விருவரின் சிற்பங்களும் மன்னரின் சிற்பமும் இக்கோயிலில் உள்ளது மிகவும் சிறப்பானதாகும். இக்கோயில் பராமரிப்பு, விழாக்களுக்கு மிலாடகுலராயன் ஏராளமான நஞ்சை புஞ்சை நிலங்களையும் கொடுத்துள்ளார். மிலாடகுலராயன் பிறந்த வேட்பூர் இன்று வேப்பூர் என மருவிய பெயரில் புடலூருக்கு அருகில் உள்ளது. மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில் இவ்வூர் ஆறகளூர் சிற்றரசர் பொன்பரப்பின வாணகோவரையரிடம் சாமந்த முதலியாக இருந்த உடையநாயன் வாணராயன் என்பவருக்கு ஜீவித ஊராக விளங்கியது. ஆறகளூர் மன்னர் நாயன் இராஜ இராஜ தேவனான இராஜராஜ மகதை நாடாழ்வான் என்பவர் கல்லூர் என்ற ஊரில் இருபது வேலி புன்சை நிலத்தைக் கொடையாகக் கொடுத்துள்ளார். இவருடைய பிறந்த நாள் உத்திராடத்திலே இக்கோயிலில் விழா நடத்த இவருடைய சாமந்த முதலி குழைஞ்சான் சேதிராயன் என்பவர் புடலூர், ஊராண்டான் குறிச்சி, குடவன்பாடி ஆகிய ஊர்களில் நிலக்கொடை வழங்கியுள்ளார். இக்கோயில் அம்மன் சன்னதியில் சூரப்புநாயக்கரின் கல்வெட்டும் உள்ளது. கல்வெட்டு

* இக்கல்வெட்டுக்களைக் கண்டறிந்து படியெடுக்க உதவிய என் மாணவர் திரு. தொ. வெங்கடாசலத்துக்கு என் நன்றி.

குறிப்பிடும் ஊர்களான ஆவட்டி, வேட்பூர், குடவன்பாடி, ஊராண்டான் குறிச்சி, புடலூர், நரையூர், கல்லூர் முதலிய ஊர்கள் இன்றும் உள்ளன.

1.1 இடம்: கோயில் மகாமண்டப வடசுவர் மேற்குப்பக்க முப்பட்டைக் குமுதப் பகுதி
காலம்: இரண்டாம் இராசாதிராசன், 1174

*1* ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவன சக்கரவத்திகள் ஸ்ரீ இராசாதிராச தேவற்க்கு யாண்டு 8 ஆவது இருங்கோளப்பாடி நாட்டு வேட்ப்பூருடையான் பெரியான் திருவனான இராசராச மிலாட

*2* குலராயனேன் மிலாடாகிய செனனாத வளநாட்டுக் கீழ்நரையூர் கூற்றத்துப் புடலூரில் நான் எழுந்தருளிவித்த உடையார் திருவனத்தீச்வரமுடைய நாயநார் திருநாமத்துக்

*3* காணி ஆக நான் காணியாக நீர்வார்த்துக் குடுத்தேன் வேட்ப்பூருடையான் பெரியாந் திருவனான இராசராச மிலாடகுலராயனேன்

1.2 இடம்: அர்த்த மண்டபத் தென் சுவர் முப்பட்டைக் குமுதம்
காலம்: இரண்டாம் இராசாதிராசன், 1174
குறிப்பு: முதல் மூன்று வரிகள் பாட்டாக உள்ளன

*1* ஸ்வஸ்திஸ்ரீ எண்டிசையும் உடைய பிராந் இராசாதிராசர்க்கு யாண்டு
எட்டு முதல்லாய் பங்குனி பூசத்து கண்டவர்
தம்மனங் களிப்பச் சிவயிலிங்க புடலூரவர்க்கு
கிழக்கு கண்டு திருக்கற்றளியும் கண்டாந் புண்டரிக
திருமகன் கோந் ஆவட்டிக் கரைசந் புகழ்பூண்டி மன
உய்யகொண்டாந் தந்புத

*2* ல்வந் வண்டில்வயல் வேழ்ப்பூர் வாழ் திருவன் செய
பெரியான் மகன் திருவன் இராசராச மிலாடகுலராசேய் உ
நன்செய் நிலம் இருவேலி புன்செய் அஞ்சு வேலி
நாயகியு நாயகருக்கிறுக்க நிலம் பத்து மின் செய் சுடர்
வழுவாமல் செலுத்துகைக்கு நிலமோர் முப்பத்துமா
மலர் கொய்ய இட்ட நிலம்

*3* ஒரு கால் பொன்செய் அணிமாட பிடவை அந்தில் போது
விழாவுக்கு உபய விளக்கு அரிசி நெய் ஆளவஞ்சமின்றி

யிவை கண்டான் வேழ்ப்பூர் வாழ் பெரியான் மகன்
திருவன் இராசராச மிலாடகுலராசேய் உ இத்திருக்
கற்றளிக்கு தச்சாசாரியன் தில்லைனாயகன் வள்ளல்லான
தில்லைனாயக ஆசாரியன்நேன்

4 இந்த ஸ்ரீ விமாநம் செய்விக்க காணியாக நீர்வாத்து
சிறப்பாக விட்ட நன்செய் இரண்டு மாவும் புன்செய்
நிலம் பத்தும் சிறப்பாக விட்டேந் இத்தில்லை நாயக
தச்சாசாரியனுக்கு திருவனாந இராசராச மலாடகுல
ராசநேன் பத்தாவதுக் குடுத்தேன் உ ஸ்வஸ்திஸ்ரீ ராஜராஜ
தேவர்க்கு யாண்டு 10வது மிலாடாகிய ஜநநா

5 த வளநாட்டு கீழ்நரையூர் கூற்றத்து புடலூர் திருவனந்தீச்0
வரமுடைய நாயநார்க்கு சந்திராதித்தவரை செல்ல
இக்கோயிலில் காணி உடைய பாலாச்0ரய கோத்திரத்து
சிவப்3ராஹ்மணநேன் நிலக்கிரிவன் ஆடவல்லாந் பட்டநேன்
வேழ்ப்பூர் உடையாந்னான பெரியான் திருவன்னான

6 இராசராச மலாடகுலராயநேன் திருநுந்தா விளக்கு
இரண்டுக்கும் சந்த்ராதித்தவரை செலுத்தக்கடவேந்னாக
ஸம்மதித்து இவுபயம் கொண்டேந் பாலாச்0ரய கோத்
திரத்து நிலக்கிரிவந் ஆடவல்ல பட்டநேன் கைக்
கொண்ட புந்செய் நிலம் குடவன்பாடி நத்தத்தில்
குழி ஆயிரமும் பு

7 டலூர் மேல்பரப்பில் குழி யிரண்டாயிரம் ஆக நிலம்
ஒந்நரை வேலியும் கைக் கொண்டேந் பால்லாச்0ரயந்
ஆடவல்லாந் பட்டநேன் இத்திருநுன்தா விளக்கு இரண்டும்
சந்த்ராதித்தவரை செலுத்தக்கடவேநாக ஸம்மதித்து
யிவுபயம் கைகொண்டேந் உ

13 இடம்: அர்த்தமண்டபத் தென்சுவர் சிற்பங்கள் மேல்
காலம்: கி.பி. 1174

1 ஸ்வஸ்திஸ்ரீ வேழ்ப்பூரு
2 டையான் பெரியாந்
3 திருவனான இராரா மிலாட
4 குலராயன் இத்தன்மம் செய்தான் உ

1.4

*1 குழுமூருடையாந் மிதயன்*
*2 திருவன்நான துண்ட*
*3 த்திள்ளங்கோ :உ*

1.5

*1 இக்கோயிலுக்கு ஆசா*
*2 ரியந் வள்ளலான தி*
*3 ல்லைனாயக ஆசாரி*
*4 யந் 112 ஸ்வஸ்திஶ்ரீ*

1.6 இடம்: அர்த்தமண்டப வடசுவர் முப்பட்டைக் குமுதம்
காலம்: இரண்டாம் இராசாதிராசன், 1178

*1 ஸ்வஸ்திஶ்ரீ கடல் சூழ்ந்த பார்மாதரும் பூமாதரும் கலைமாத ரும் அடல் சூழ்ந்த போர்மாதரும் சீர்மாதரும் வாழ் நாற்கடல் சூழ் புவியேழும் பாற்கடல் போற் புகழ்பரப்பி ஆதியுகமா மென்னச் சோதிமுடி புனைந்தருளி அறுசமையமும் ஐம்பூதமும் நெறியிலே நின்று பார்க்கத் தென்னவரும் சேரலரும் சிங்களரும் முதலாய மந்நவர்கள் திறை சுமந்து வந்திண்டி சேவிப்ப ஊழிஊழி செங்கோல் எழுபாரும் இனிதளிப்ப*

*2 செம்பொந் வீரஸிம்ஹாஸநத்து உலகுடைய முக்கோக் கிழாநடிகளோடும் வீற்றிருந்தருளிய கோவிராசகேசரி பந்மராந திரிபுவநசக்கரவத்திகள் ஶ்ரீ ராஜாதிராஜ தேவர் க்கு யாண்டு 12 வது திரிபுவன சக்கரவத்திகள் கோநேரிமேல் கொண்டாந் மிலாடாகிய ஜனநாதவளநாட்டு கீழ்நறையூர்க் கூற்றத்து புடவூரில் வேட்ப்பூருடையாந் பெரியாந் திருவனான இராசராசமிலாடகுலராயன் கட்டிவித்த திருவணந்தீச்வரமுடையார் கோயில் தேவ கன்மியும் ஶ்ரீமாஹேச்வரக் கங்காணி செ*

*3 ய்வார்களுங் கண்டு இத்தேவர்க்கு பலபடி நிமந்தங் களுக்கு இறுப்பதாக இப்புடவூரேரி கீழ்யிட்ட நன்செய் நிலம் ஐய்வேலியும் புன்செய் நிலம் ஐய்ஞ்சு சுற்று*

வேலியும் இன்னாட்டு மாகாறலில் இட்ட நன்செய்
நிலம் ஐய்வேலியும் ஆக நன்செய் நிலம் பதிற்று
வேலியும் புன்செய் நிலம் ஐம்பதிற்று வேலியும் முந்
நுடையாரையும் பழம் பெயரும் தவிர்ந்து நன்செய் நிலம் வேலி
ஒன்றுக்கு நெல் இருபதின் கலமும் புன்செய்
வேலி ஒன்றுக்கு நெல்

4 லு எண்கலமாகவும் வந்த நெல்லு இறைகட்டி கொண்டு
நிமந்தஞ் செலுத்தக் கடவதாக வரியிலாற்கும் வரிக்
கூறு செய்வார்களுக்குஞ் சொல்லி உள்வரி போத்தகக்
காட்டிநோம் இன் நிலங்கள் பன்நிரண்டாவது முதல்
யிறையிலியாகக் கைக்கொண்டு இத்தேவற்குச் சன்திராதித்த
வரை இப்படி நிவந்தஞ் செலுத்த[ப்பண்ணுக].

1.7 இடம்: அர்த்தமண்டப தென்சுவர் இடைநாழி மகாமண்டப மேற்குச் சுவர்
காலம்: மூன்றாம் குலோத்துங்கன், 1181

1 ஸ்வஸ்திஸ்ரீ புயல்வாய்த்து வளம்பெருக பொய்யாத நாந்மறை
யுஞ் செயல்வாய்த்து திருமகளுஞ் சிறந்து வாழ வெண்மதிபோற்
குடை விளங்க வேல் வேந்த ரடிவணங்க மண்ம

2 டந்தை மநங்களிப்ப மநுநீதி தழைத்தோங்க சக்கரமுஞ்
செங்கோலுந் திக்கனைத்தும் செல நடப்ப கற்ப காலம்
புவிகாப்ப பொற்பமைந்த முடிபுனைந்து செம்

3 பொன் வீரசிங்காசனத்து புவனமுழுதுடையாளொடும்
வீற்றிருந்தருளிய கோப்பரகேசரிபம்மரான திரிபுவனச் சக்கர
வத்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோ

4 ழ தேவற்கு யாண்டு மூன்றாவது மிலாடாகிய ஜனனாத
வளனாட்டுக் கீழ்நரையூர் கூற்றத்துப் புடலூரில் திருவநந்தீசுவரம்
உடைய நாயநாற்கு இந்நாடு

5 டையநாயந் இராராதேவந்நாந இராரா மகதை நாடாழ்
வாநேந் இந்நாயநாற்குப்படி நிமந்தம் சந்திராதித்தவரை
செல்வதாக இன்னாட்டுக் கல்லூற்

6 புந்செய் நிலத்தில் மேல்பாதியில் புடலூர் எல்லைக்கு கிழக்கு
இன்னாயனார்க்கு விட்ட புந்செய் நிலம் இருபதிற்று வேலியும்
இந்நிலம் இனாயனாற்கு சந்திராதித்தவரை

*7* செல்வதாக விட்டேந் நாயந் இராராதேவனாந இரார மகதை நாடாழ்வாநேன் இது பன்மாஹேச்வரரக்ஷை

1.8 இடம்: இராசகோபுர கிழக்கு பீடம் (வலப்பக்கம்)
காலம்: மூன்றாம் குலோத்துங்கன், 1181

*1* ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ விசையராசேந்திர சோழதேவர்க்கு யாண்டு மூன்றாவது சாமந்த முதலி

*2* களில் உடையநாயன் வாணராயன் புடலூர் பற்று சீவிதம் பெற்ற நாளில் புடலூர் மூன்றாவது முதல் நஞ்செய் புன்செய் ஆயமு

*3* ம் நாற்பால் உள்ளிட்ட அந்தராயங்களுந் தவிர்ந்து நிலமும் அளவின்படியே கொள்ளக் கடவதாகவும் இப்படி தவிர ஏற்றச் [சுருக்கரு]

*4* செய்தாருண்டாகில் தன் மிணாட்டியை பறையர்க்கு குடுப்பான் இவை வாணராயன்

1.9 இடம்: இராசகோபுர கிழக்குப் பீடம் (வாயில் இடப்பக்கம்)
காலம்: மூன்றாம் குலோத்துங்கன், 1186
குறிப்பு: கல்வெட்டு மிகவும் சிதைந்துள்ளது

*1* ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவன சக்கரவத்திகள் குலோத்துங்க சோழ தேவர்க்கு யாண்டு *8*_ஆவது உடையார் திருவனந்தீச்வரமுடையார் ......தேவதாந

*2* அகப்பட்ட இந்நாயநார்க்கு நீர்வார்த்து கொடுத்தாந்

1.10 இடம்: மகாமண்டபத் தென்சுவர் வாயில் வலப்பக்கம்
காலம்: மூன்றாம் குலோத்துங்கன், 1216

*1* ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ திரிபுவ
*2* னவீரதேவற்க்கு.யாண்டு *38*_வது மிலாடாகி
*3* ய ஜனநாதவளநாட்டுக் கீணரையூற் கூற்றத்துப்
*4* புடலூர் உடையார் திருவனந்தீச்வரமுடைய நாய
*5* நார் புரட்டாதித் திருநாள் முதல்லா பொன்பரப்
*6* பிநான் வாணகோவரையர் ஜந்மநக்ஷத்திரம் உத்திரா
*7* டத்திலே தீர்த்தம் ப்ரஸாதித்தருள இவர் சாமந்

8 தாரில் குழைஞ்சான் சேதிராயனேன் பூரட்டாதித்
திருநாளுங் கண்டு.

9 இதுக்கு வேண்டு நிமந்தங்களுக்கு நாயநார் திருமுகப்ப

10 டி புடலூர் நஞ்சை புன்செய் நிலங்கள் குழி ... ஊரான்

11 டான் குறுச்சியில் குழி..... குடவன் பாடி நத்தத்தில்

12 குழி ... ம் ஆக குழி ... இது சந்திராதித்தவல்
பன்மாஹேச்வரரக்ஷை.

# 2 பழுவூர்ப் பழுவேட்டரையர் கல்வெட்டு

இல. தியாகராசன்,
அரியலூர்

திருச்சிராப்பள்ளி மாவட்டம், உடையார்பாளையம் வட்டம் மேலப்பழுவூர் அகத்திசுவர் கோயில் தெற்கு மற்றும் கிழக்குச் சுவர்களில் இக்கல்வெட்டு உள்ளது. ஏற்கெனவே இந்தியக் கல்வெட்டியல் துறையினால் படியெடுக்கப்பட்டு ஒரு பகுதி (வரிகள் 1-37) வெளியிடப்பட்டுள்ளது (தென்னிந்தியக் கல்வெட்டுக்கள், தொகுதி 19 எண் 378). ஆனால் 38 முதல் 93 முடிய உள்ள வரிகளையும் சேர்த்து முழுப்பகுதியும் இங்குக் கொடுக்கப்படுகிறது. “நாட்டார்” என்று நாட்டு மன்றத்தின் அமைப்பு பற்றிச் செய்தி தரும் மிகச்சில பழைய கல்வெட்டுக்களில் இதுவும் ஒன்று என்பதைக் குறிப்பிட வேண்டும்.*

2.1

1 ஸ்வஸ்திஸ்ரீ கோப்பரகேசரிபன்மற்கு யா
2 ண்டு 15 ஆவது குன்றக் கூற்றத்து நாட்
3 டோமுக்கு அடிகள் பழுவேட்டரையர் கண்டன் ம
4 றவனார் இந்நாட்டு உறத்தூர்ப் பழம்
5 பேரும் பழங்குடியும் நீக்கி கருப்பூரு
6 டைய வேங்கடவன் அரங்கனான செம்
7 பியன் விறைநாட்டு கோநார்க்கு ஜந்ம
8 பூமியாகக் கருப்பூரென்னும் பேரினால் கா
9 ணி செய்து இதுக்கு ஆட்டைவுட்டம் தால
10 ச் செம்மை பொன் இருபத்தைய்ங்கழஞ்
11 சும் சந்த்ராதித்யவல் நிலை இறையாவதாகவும் நா
12 ம் தரஞ்செய்யும்போது இருபத்தைய்ங்
13 கழஞ்சுமல்லது ஏறத்தரஞ் செய்யாத
14 தாகவும் இப்பரிசு சந்த்ராதித்தவத் காணி
15 யாகச் செய்து குடுத்தோம் நாட்டார் நீங்
16 களும் இப்பரிசு செய்து குடுங்களென்றருளி
17 ச்செய்ய நாட்டோமும் இன்னாட்டு உறத்தூ
18 ரை பழம்பெரும் பழங்குடியு நீக்கி கருப்பூ

* இக்கல்வெட்டு ஆய்வில் உதவிய பேராசிரியர் பி. முருகானந்தம் அவர்களுக்கு நன்றி

19 ரென்னும் பெயராக்கி ஆட்டைவட்டம் நிலை
20 யிறை தாலச் செம்மை பொன் இருபத்தை
21 ய்ங்கழஞ்சாக்கி நாட்டோம் தரஞ்செய்யும் பொ
22 ன் இருபத்தைய்ங்கழஞ்சு மல்லது ஏறத்த
23 ரஞ் செய்யாததாகவும் இ
24 ப்பரிசு கருப்பூருடைய வே
25 ங்கடவன் அரங்கனான
26 செம்பியன் விறை னாட்
27 டுக் கோனார்க்கு ஜந்ம பூமியாக
28 கருப்பூரென்னும் பெயரினால்
29 சந்த்ராத்திவல் காணியாக இ
30 றையோலை செய்து குடுத்
31 தோம் குன்றக் கூற்றத்து நாட்
32 டோம் சிற்றிறையும் அண
33 ச் ....... ........ .......
34 இவை பழுவேட்டரையன் கண்டன் மற
35 வனேன் இவை என்னெழுத்து இப்பரிசு இ
36 சைந்தோம் மருத்தூருடைய காடன் மாறாயனே
37 ன் இவை யென்னெழுத்து
38 நாட்டூர் அறையோலையா
39 லெழுத் தெழுதினாரை யெழுதியி
40 து மல்லூர்ருடைய சங்கினநாகே
41 தமானனேன் எழுத்து புத்தூரு
42 டைய தூறாடி கோனேன் எழுத்து
43 ஆறணிநல்லூர் உடைய செருவல்
44 ... சோமதேவன் சுவாமி எழுத்து
45 சாத்தனூருடைய திணையான் மா
46 யிலட்டி எழுத்து மேலமருத
47 த்தூருடைய திணையான் குடிதா
48 ங்கி எழுத்து பட்டுடைய சிங்க
49 னைய்யாறனெழுத்து
50 உம்பளக் கானத்தூருடை
51 ய ஒண்ண பாம்பனெழு
52 த்து ஆண்மகனக்கூரு
53 டைய சாத்தன் நம்பனெ
54 ழுத்து கூற்றூருடைய இரண
55 [முக] நாமப் பெருந்திணை எழு
56 த்து வரகூருடைய ஒண்ண
57 வேம்பனெழுத்து புலிமிசை
58 உடைய வேலிதாங்கி எழுத்து
59 ஆதனூருடைய சாத்தன் தா

60 ழி எழுத்து குளத்தூருடைய
61 அரையன் எழுத்து
62 வரகுபாடி உடைய மானதின்ப
63 பேரையனெழுத்து
64 சிறுகண்ணூருடையா கார்சலமு
65 கனே எழுத்து சிற்றகழி உடைய
66 வடுகன்பூதியெழுத்து திம்மி
67 யுடைய சுந்தரசோழப் பெருந்தி
68 ணையெழுத்து புத்தூருடைய ஆ
69 ர்மலைக்கோன் பேரைய
70 னெழுத்து பாற்சோறியுடைய அரையனாச்ச
னெழுத்து சிங்கானத்தூருடை
71 ய பெருமான் மழபாடியெழு
72 த்து அமரப்பதி உடைய
73 கலிமறிபன்னி யெழுத்து
74 கூற்றூருடைய மறவகோ
75 ன் பெருந்திணை எழுத்து
76 கற்காட்டுருடைய வேம்ப
77 னுள் வேலி எழுத்து
78 பேரகழியுடைய கண்டம
79 லையமா னெழுத்து
80 கிளியூருடைய நாரணனா
81 டுங்க யெழுத்து வெண்ம
82 ணியுடைய கண்டப்பேரைய
83 னெழுத்து சிங்கண்ணூருடை
84 ய படைப்பேரையனந்தயாற
85 னெழுத்து அருங்காயிலு
86 டைய ஆச்சன் நக்கனெ
87 ழுத்து அனைஞல்லூ
88 ருடைய நக்கன் குமரனெழுத்
89 து வடவசுகூருடைய நிருப
90 கேசரி மலையமானெழுத்து
91 மால்வாயிலுடைய மற
92 வகோன் பேரையனெழு
93 த்து

# 3. ஆனத்தூர் குமிழிக் கல்வெட்டு

சு. இராசவேலு, சென்னை

ஆனத்தூர், செஞ்சி வட்டம், தென் ஆர்க்காடு மாவட்டம், ஏரியின் உள்வாயில் உள்ள குமிழி அதாவது மதகுக் கல்லில் வெட்டப்பட்டுள்ள கல்வெட்டு.

இக்கல்வெட்டின் காலம் கி.பி. 7 ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாக இருக்கலாம். பல்லவ மன்னன் முதலாம் மகேந்திரவர்மன் காலத்திய எழுத்தமைதியைக் கொண்டு விளங்குகிறது. தமிழ் நாட்டில் இதுவரை கிடைத்துள்ள குமிழிக் கல்வெட்டுக்களில் காலத்தால் இதுவே முதல் கல்வெட்டாகும். ஸ்ரீ குணமிலி என்பது மதகின் பெயராக இருக்கலாம். இது இந்தியத் தொல்லியல் அளவீட்டுத் துறையின் 1991-92 ஆம் ஆண்டைய கல்வெட்டு அறிக்கையில் சேர்க்கப்பட்டுள்ளது. இக்கல்வெட்டைப் படி எடுத்த போது உடன் வந்து உதவியவர் விழுப்புரம் திரு. வீரராகவன். இக்கல்வெட்டு உள்ள பலகைக் கல் செயற்பொறிஞர் திரு கொடுமுடி சண்முகன் அவர்கள் முயற்சியால் இப்போது திண்டிவனம் பொதுப்பணித்துறை அலுவலக வளாகத்தில் வைத்துப் பாதுகாக்கப்படுகிறது.

ஸ்ரீ குணமிலி



# 4. புதுக்கோட்டை மாவட்டக் குமிழிக் கல்வெட்டுக்கள்

கரு. இராசேந்திரன், மேலப்பனையூர்

ஆவணம் இதழ் 1 ல் இதே தலைப்பில் வெளியிட்ட குமிழிக் கல்வெட்டுக்களின் தொடர்ச்சியாக மேலும் பதினைந்து கல்வெட்டுக்கள் இங்குக் கொடுக்கப்படுகின்றன.

4.1 குளத்தூர் வட்டம் மதியநல்லூர் பெரியகண்மாயின் மேற்கு மடையின் தூணில் உள்ள கல்வெட்டு

*1 ஸ்வஸ்தி ஸ்ரீ சாத்*
*2 தன் மாறன்*
*3 செய்வித்த*
*4 குமிழி*

4.2 திருமயம் வட்டம் திருமயம் வேங்கைக் கண்மாயின் பழைய மடைத் தூணில் உள்ள கல்வெட்டு. கல்வெட்டின் தலைப் பகுதியில் இரட்டை மீனும் செண்டும் வரையப்பட்டு உள்ளது.

*1 ஸ்வஸ்திஸ்ரீ இம்மடை*
*2 மஞ்சக்குடி உமை*
*3 டயார்க்கு மாணி*
*4 க்க ஆழ்வார் உய்*
*5 ய வந்தரான குல*
*6 சேகர விழுப்பரை*
*7 யர் தன்மம் றி*

4.3 புதுக்கோட்டை வட்டம் கவிநாட்டுக் கண்மாயின் பெரியமடையின் தூணில் உள்ள கல்வெட்டு.

காலம்: கி.பி. எட்டாம் நூற்றாண்டு

*1 ஸ்ரீ கோமாற*
*2 ஞ்சடையர்*
*3 யாண்டு*
*4 7 ஆவது*
*5 வல்ல நாட்டு*
*6 கவிர்ப்பால்*
*7 மூதாண்டி பெ*
*8 ருந்திணை*
*9 வெண்கன்*
*10 சேவித்த*
*11 து*

4.4 குளத்தூர் வட்டம் ஒடுக்கூர் கண்மாயின் தெற்கு மடைத்தூணில் உள்ள கல்வெட்டு

காலம்: கி.பி. 12 ஆம் நூற்றாண்டு

*1 ஸ்வஸ்தி ஸ்ரீ*
*2 அரசர்க*
*3 ண்ட ரா*
*4 மன்*

4.5 குளத்தூர் வட்டம் வடசேரிப்பட்டி இளமணாக் கண்மாயின் பெரிய மடையின் தூணில் உள்ள கல்வெட்டு

காலம்: கி.பி. 11 ஆம் நூற்றாண்டு

*1 [இது] நாட்டுவித்*
*2 தான் இரட்டபாடி*
*3 கொண்ட சோ*
*4 ழ வளநாட்டு நா*
*5 வலூர் மறவன் பெ*
*6 ரியான் சதிரனான உ*
*7 சித வாரணப் பே*
*8 ரையன்*

4.6 குளத்தூர் வட்டம் தாயினிப்பட்டி கிராமம் பெருங்குடிப்பட்டி பெரிய கண்மாயின் தெற்கு மடைத்தூணில் உள்ள கல்வெட்டு

காலம்: கி.பி. 10ஆம் நூற்றாண்டு

*1 ஸ்வஸ்தி*
*2 ஸ்ரீ திருச்சி*
*3 ற்றம்பல*
*4 ம் உடை*
*5 யான்*

4.7 குளத்தூர் வட்டம் பெருஞ்சினை கண்மாயின் மேற்கு மடைத்தூணில் உள்ள கல்வெட்டு

காலம்: கி.பி. 10ஆம் நூற்றாண்டு

*1 .....*
*2 க்குமிழிக்*
*3 கால் நாட்டி*
*4 நேன் இந்நாட்டு*
*5 வடவகைத் த*
*6 ட்டாந் ஐந்மத்த*
*7 ட்டாந் பொந்நக*
*8 ரத்தாந் சுந்தநாந*

*9 பெருஞ்சுனையூர்*

*10 த்தட்டாநேன்*

4.8 குளத்தூர் வட்டம் சத்தியமங்கலம் ஆலங்கண்மாயின் மடைத்தூணில் உள்ள கல்வெட்டு

காலம்: கி.பி. 11ஆம் நூற்றாண்டு

*1 ஸ்வஸ்தி ஸ்ரீ*
*2 இந்தக் குமி*
*3 ழியில் மண*
*4 வாளக்கால் சே*
*5 வித்தான் இவ்*
*6 வூருடையான்*
*7 மாலை திருப்*
*8 பெருமானாந*
*9 முடிகொண்*
*10 ட சோழ நாடா*
*11 ழ்வான்*

4.9 குளத்தூர் வட்டம் சித்துப்பட்டி வேங்கைக்குறிச்சிக் கண்மாயின் மேற்கு மடையின் மேற்குத் தூணில் உள்ள கல்வெட்டு

காலம்: கி.பி. 10_11ஆம் நூற்றாண்டு

*1 ஸ்வஸ்தி ஸ்ரீ*
*2 ஆதிதன்*
*3 சுந்தர*
*4 கண்டந்*

4.10 குளத்தூர் வட்டம் சித்துப்பட்டி வேங்கைக்குறிச்சிக் கண்மாயின் மேற்கு மடையின் கிழக்குத் தூணில் உள்ள கல்வெட்டு

காலம்: கி.பி. 8_9 ஆம் நூற்றாண்டு

*1 ஸ்வ*
*2 ஸ்தி*
*3 ஸ்ரீ*
*4 இராமன்*
*5 காடன்*

4.11 குளத்தூர் வட்டம் செனையக்குடி பெரிய கண்மாயின் நடுமடையின் தூணில் உள்ள கல்வெட்டு

காலம்: கி.பி. 9_10 ஆம் நூற்றாண்டு

*1 ஸ்வஸ்தி ஸ்ரீ*
*2 கோவிராஜ*
*3 கேசரி பந்ம*
*4 ற்கு யாண்டு*
*5 5 ஆவது வட*
*6 சிறுவாயி நா*
*7 ட்டுத் தானையி*
*8 க்குடி கண*
*9 த்தான் சத்*
*10 தி நாட்டின*
*11 குமிழிக்*
*12 கால்*

4.12 குளத்தூர் வட்டம் வாழமங்கலம் பெரிய கண்மாயின் பெரியமடையின் தூணில் உள்ள கல்வெட்டு

*1 உடையார்*

*2 மடைப்ப [ள்]*

*3 ளிப்பெண்*

*4 டாட்டி [ஐயா]*

*5 ர நப்பி சே*

*6 வித்த க*

*7 ல்லு*

4.13 குளத்தூர் வட்டம் விராலூர் பெரிய கண்மாய் மடைத்தூணில் உள்ள கல்வெட்டு

காலம்: கி.பி. 9_10 ஆம் நூற்றாண்டு

*1 ஸ்வஸ்தி ஸ்ரீ சோ*

*2 ழபெருந்தேவி*

4.14 குளத்தூர் வட்டம் சேரனூர்க் கண்மாய் பழைய மடையின் தூணில் உள்ள கல்வெட்டு

*1 ஸ்வஸ்தி*

*2 ஸ்ரீ உடை*

*3 யார் ராஜ*

*4 ராஜ [சுந்*

*5 தர] வேளார் தே*

*6 வியார் நம்பிரா*

*7 ன் [சாதைகும*

*8 ரனான] கொ*

*9 மத்த தேவியா*

*10 ர் சேவித்த கு*

*11 மிழி*

4.15 குளத்தூர் வட்டம் ராஜகிரி பெரிய கண்மாயின் வடக்கு மடையின் தூணில் உள்ள கல்வெட்டு

காலம்: முதல் அல்லது இரண்டாம் குலோத்துங்கன்,
கி.பி. 12ஆம் நூற்றாண்டு

*1 ஸ்வஸ்தி ஸ்ரீ குலத்துங்க சோ*

*2 ழதேவர்க்கு யாண்டு [ஆறா]வ*

*3 து இரட்டபாடி கொண்ட சோ*

*4 ழவளநாட்டு உறத்தூர் கூற்றத்*

*5 து இராஜகேசரி நல்லூர்*

*6 குமிழி புதுக்கிநான் கடவா*

*7 ந்குடி அரவாதந் ...கு*

*8 லோத்துங்க சோழ*

*9 .....ளபய்யராஜ*

4.16 திருமயம் வட்டம் வாழைக்குறிச்சி ஊரணிக்குள் கிடக்கும் பலகைக்கல் கல்வெட்டு

காலம்: கி.பி. 12 ஆம் நூற்றாண்டு

*1 ஸ்வஸ்தி ஸ்ரீ கூடல்லூர்*

*2 நாட்டு செவ்வல்லூர்*

*3 மறவந் சொக்கந் கொ*

*4 ளித்த ஊருணி*

4.17 அதே ஊரணிக்குள் கிடக்கும் இன்னொரு பலகைக்கல் கல்வெட்டு

காலம்: கி.பி. 14 ஆம் நூற்றாண்டு

*1 ஸ்வஸ்தி ஸிரி இவ்*

*2 வகம் மறமா*

*3 ணிக்கம் உ.*

# 5. கிருஷ்ணதேவராயரின் கணியாமூர்க் கல்வெட்டு

சூ. சுவாமிநாதன், மைசூர்

கணியாமூர் தென்னார்க்காடு மாவட்டம் கள்ளக்குறிச்சி வட்டத்திலுள்ளது. இங்குள்ள சிவன் கோயிலில் உள்ள பல கல்வெட்டுக்களில் விசயநகர மன்னன் கிருஷ்ணதேவராயனின் கல்வெட்டும் ஒன்று. இக் கல்வெட்டு கோயிலின் கருவறையின் வடக்குச் சுவரில் பொறிக்கப்பட்டுள்ளது.

இக் கல்வெட்டு கிருஷ்ணதேவராயரின் (கி.பி. 1509 – 29) 11 ஆம் ஆட்சியாண்டைக் குறிப்பிடுகிறது. விஜயநகர அரசர் கல்வெட்டுக்களில் இதுபோன்று ஆட்சியாண்டு குறிப்பிடப்படுவதில்லை. ஆகவே இதில் குறிக்கப்பட்டுள்ள ஆண்டு சந்தேகத்துக்குரியது. இதில் நயினான் என்பானுக்கு ஊரவரும், கோயிலதிகாரிகளும் கணியாமூரில் கொல்லு, கல்தச்சு மற்றும் தச்சுவேலைகளை ஆற்ற உரிமைகள் அளித்து இதற்காக இறையிலி நிலங்களும் கொடுத்தார்கள் என்று சொல்லப்படுகிறது

1 சுவத்திசிரிமந் மகாமண்டெசுவரந் கிருஷ்ணதேவ மாராயற்கு யாண்டு 11 ளறான வது மலாடாகிய ஜநநாதவளநாட்டு வடநரையூ

2 ர் கூற்றத்து கணியாமறு [வூ] ரான பொன்பரப்பின சோவு ளீசுரமுடைய [நா]யினார் பொன்பரப்பின [ந]ல்லூரில் [தானத்தாரும் ஊரவரோம் கோயி]

3 உலகுடையான் மகன் நயினானுக்கு இவ்வூரில் கொல்ல காணியும் [கல்] தச்சகாணியும் தச்ச காணியும் காணியா[ட்சியாய்] பண்ணி குடுத்தோம். இது

4 வும் நஞ்சையிலே [100 குழியும்] புஞ்சையிலே கலவி[ரைக்]கும் யிறையிலியாக பண்ணி குடுத்தோம் யிதுவும் [யிராழி] செ......பண்ணிகு

5 டுத்தோம் யிப்படிக்கு சந்திராயிதித்தவரையும் செல்ல

6 கடவதாகவும் இப்படிக்கு தாநத்தாரும் ஊரவரும் இப்ப

7 டிக்கு ஊற் கணக்கபிள்ளை எழுத்து.

# 6. இனாம்குளத்தூர் நினைவுத்தூண் கல்வெட்டுக்கள்

இர. ஜெயராமன், தஞ்சாவூர்

இனாம்குளத்தூர் திருச்சி விராலிமலை சாலையில் திருச்சியிலிருந்து 18 கி.மீ. தொலைவில் உள்ளது. இவ்வூரின் கிழக்கே முகப்பு வாயிலில் பேருந்து நிறுத்தத்திற்கு அருகில் உள்ள சிறிய விநாயகர் கோயில் மரத்தடியை ஒட்டி கீழ்ப்புறம் அலங்கார வேலைப்பாடுகளுடன் கூடிய மூன்று தூண்கள் வரிசையாக நிறுத்திவைக்கப்பட்டுள்ளன. இவற்றின் தலைப்பகுதி வட்ட வடிவமாகச் செதுக்கப்பட்டுள்ளது. மூன்றிலும் நந்தி உருவம் காணப்படுகிறது. புதையுண்டிருந்த இத்தூண்களின் அடிப்பகுதியில் முன்புறமும், பக்கவாட்டிலும் எழுத்துக்கள் பொறிக்கப்பட்டுள்ளன*. எழுத்து அமைதியை நோக்கும்போது இவை கி.பி. 11-12 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவையாகும். திருமயம் வட்டத்தில் கிடைத்துள்ள நினைவுத்தூண் கல்வெட்டுக்களோடு இவற்றை ஒப்பிடலாம். *(பார்க்க ஆவணம் 2, ப.4)*

*6.1*

| | |
|---|---|
| *1* ஸ்வஸ்திஸ்ரீ | *8* கிழத் |
| *2* உறத்தூர் | *9* தியார் |
| *3* கூற்றத்து | *10* தலை |
| *4* கோ நாட் | *11* நாழி |
| *5* டு...... | *12* ய நாட் |
| *6* ....... | *13* டிந க |
| *7* நம்பி | *14* ல் |

*6.2*

| | |
|---|---|
| *1* ஸ்வஸ்திஸ்ரீ | *7* ப்பூருடை |
| *2* கேரளான் | *8* யான்... |
| *3* தக வளநா | *9* அழிய நா |
| *4* ட்டு உறை | *10* ட்டிந க |
| *5* யூர்க்கூற்ற | *11* ல் |
| *6* த்து கள | |

*6.3*

*1 ஸ்வஸ்திஸ்ரீ உற*

*2 த்தூர் கூற்றத்*

*3 து வட கோநாட்*

*4 ட்டு பெருங்*

*5 .......*

*6 தலை*

*7 நாழி*

*8 நாட்டி*

*9 ந கல்*

*6.4* இவ்வூரின் வடக்குப்பக்கத்தில் உள்ள வரதராசப் பெருமாள் கோயிலின் கருவறைக் குமுதப்படையில் மிகவும் சிதைந்த கல்வெட்டுகள் காணப்படுகின்றன.

வடக்குப்பக்கம்

*1 ஸ்வஸ்திஸ்ரீ வடகோனாட்டுக் குளத்தூர் அருளாள விண்ணகர் ஸ்ரீ ....... பெருமா ........ ப்பண*

*2 நாடக்குறிச்சி உடையார் அரையன் உ..... [ன]மழகி ...... ....... யமழவார் ....... ம்ம ஸ்ரீ சுப மஸ்து*

---

* இக்கல்வெட்டுக்கள் பற்றிய தகவல் தந்த இனாம்குளத்தூர் திரு. எம். ஏ. பொன்னுசாமி அவர்களுக்கு நன்றி

# 7 இருவப்பபுரம் பெரும்படைச்சாத்தன் கோயில் கல்வெட்டுக்கள்

தே. கோபாலன், சென்னை

*சிதம்பரனார் மாவட்டம் திருவைகுண்டம் வட்டம் இருவப்பபுரத்தில் உள்ள பெரும்படைச்சாத்தன் கோயிலில் இரண்டு கல்வெட்டுக்கள் உள்ளன.*

*சென்ற ஆவணத்தில் வெளியான திருநெல்வேலி தலைவமார் செப்பேட்டில் (ஆவணம் 2, ப.61-62) குறித்த நிலத்துக்கு கிழக்கு எல்லையாகப் பெரும்படைச் சாத்தா கோயில் குறிக்கப்பட்டுள்ளது. இருவப்பபுரம் ஆறுமுகமங்கலத்திற்கு வடகிழக்கே 3 கிமீ தொலைவில் உள்ளது.*

*நுழைவாயிலில் கொல்லம் ஆண்டு 1088 (கி.பி.1912) இல் வெட்டப்பட்ட கல்வெட்டில் சுப்ப குடும்பன் மக்கள் இருவர் அக்கோயிலுக்கு 75 குழி நிலம் தானம் கொடுத்த செய்தி காணப்படுகிறது. இவ்விருவர் சிற்பங்களும் கோயில் நுழைவாயிலில் கைகூப்பிய நிலையில் உள்ளன.*

*7.1*

*1 1088க்கு*
*2 சீதட்டாயிரை*
*3 சுப்ப குடும்ப*
*4 ன் மகன்கள்*
*5 அடிமார் கே*
*6 ாடாங்கி இரு*
*7 ள குடும்பன்*
*8 ஸத்திரி ஆழ்*
*9 வார் சாத்தா*
*10 வுக்கு உபய*
*11 ம்*
*12 குழி 75*
*13 கோவில் கோ*
*14 டாங்கி*

*7.2* இக்கோயில் வளாகத்தின் தென்புறம் செக்கு ஒன்று காணப்படுகிறது. அச்செக்கில் உள்ள 9ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த வட்டெழுத்துக் கல்வெட்டு பின்வருமாறு:

*மூங்குடி நாட்டு மாறமங்கலத்து திணைகள் பேரால்*
*மிழலூர் அப்பனுழந் இடுவித்த செக்கு.*

குறிப்பு: இதே மிழலூர் அப்பனுழந் மதுரை மாவட்டம் மேலூருக்கு அருகில் உள்ள வஞ்சி நகரத்தில் ஒரு செக்கை அமைத்துக் கல்வெட்டும் பொறித்துள்ளான். அச்செக்கு மதுரை திருமலைநாயக்கர் மகால் அருங்காட்சியகத்தில் உள்ளது. அக்கல்வெட்டு வருமாறு:

*ஸ்ரீவழுதி வளநாட்டு மிழலூர் அப்பனுழஞ்*
*சுரநாட்டு நெல்வேளூர்ப்*
*பொற்கொடி வீரர் பேரால் இட்ட செக்கு.*

# 8. கொக்கராயன்பேட்டைக் கல்வெட்டுக்கள்

செ. இராசு, தஞ்சாவூர்

சேலம் மாவட்டம், திருச்செங்கோடு வட்டம் கொக்கராயன்பேட்டை பிரமலிங்கேசுவரர் கோயிலில் 1913 ஆம் ஆண்டு நான்கு கல்வெட்டுக்கள் படி எடுக்கப்பட்டுள்ளன. ஆனால் கீழ்க்கண்ட கல்வெட்டுக்கள் படி எடுக்கப்பெறவில்லை.

## 8.1 சண்டிகேசுவரன்கோயில் நிலையில் உள்ள கல்வெட்டு

இராசகேசரி என்னும் சோழமன்னனின் ஆறாம் ஆட்சியாண்டில் (கி.பி. 11ஆம் நூற்றாண்டு) கரைய வேட்டுவன் காழிப்பிடாரன் என்பவன் அவ்வூர் மாடுகளைப் பிறர் கவர்ந்து செல்லும்போது அவைகளை மீட்டமைக்காக திருவகழிமங்கலம் சபையார் நிலம் கொடையாக அளித்த செய்தி கூறப்படுகிறது. வேட்டுவ குலத்தாராகிய அவர் கரைய வேளான் என்று அழைக்கப்பட்டது குறிப்பிடற்குரியது.

1 ஸ்வஸ்தஸ்ரீ கோ
2 விராசகேசரி ப
3 ந்மர்க்கு செல்லா
4 நின் யாண்டு
5 ஆறாவது திருவ
6 கழி மங்கலத்
7 தில் சபையே
8 ாம் மேற்படி ஊ
9 ர் யிருக்கும் கரை
10 ய வேட்டுவ
11 ந் காழி பிடாரநாந
12 கரைய வேளானுக்கு மாடு
13 மீட்ட்துக்கு சிற
14 ப்பு செய்த நிலம
15 ாவது வெள்ள
16 ல் மயிலாடி அ
17 ரைக்குத் தெக்கு
18 ம், கரை இட்டேரிக்
19 கும் மேக்கும், சி
20 றுத்தன் நஞ்செ
21 ய் அறிதலுக்கு
22 வடக்கும், ம
23 டைவகாட்டறித
24 லுக்கு கிழக்கு
25 ம் திருவகழி ம
26 ங்கலத்து ச
27 பையோம் க
28 ரைய வேளா
29 னுக்கு நிலம்
30 அட்டிக் குடுத்தே
31 ாம்.

8.2 தனிக்கல்லில் உள்ள இக்கல்வெட்டில் நின்றுபோன ஒரு வாணிகர் கொடை குறிப்பிடப்படுகிறது. இப்போது அக்கொடைபற்றிய பழைய ஆவணத்தின்படி மீண்டும் அக்கொடை புதுப்பிக்கப்பட்டதாகத் தோன்றுகிறது. இவ்வூர் பேட்டை என அழைக்கப்பெறுவதால் வாணிகர் இங்குக் கூடியுள்ளமை பெறப்படும். காலம் 15ஆம் நூற்றாண்டு.

*1 ஆங்கிர வருஷம் புரட்டாதி மாதம் பிரமீசுவர.*

*2 முடைய நாயனார்க்கு பூர்வ தேசத்தில் பலரும்*

*3 முன்னாள் கட்டின......தர்ம சாதனம் சோர்ந்*

*4 தமையில் அந்த சாதனப்படி மிளகு கட்டளை*

*5 நா......புடவை பஞ்சு ஆறு ...... பொதி ... னூ றுக்கும்*

*6 அன்பத்தாறு தேசத்தில் ..............*

8.3 ஊர்மக்கள் இறைவன் பெயரை வைத்துள்ளனர். கொங்கு வேளாளர் சிவன் கோயிலைவிடத் தம் காணிக் கோயில்கட்கே இன்று முதன்மையளிக்கின்றனர். இக்கல்வெட்டின்மூலம் சிவபெருமான் பெயரை மக்கள் சூட்டிக் கொண்டனர் என்பதை அறிகிறோம். காலம் 17 ஆம் நூற்றாண்டு.

*1 ஆனந்த வருஷம் ஆடி மாதம் 20 ஆம் தேதி*

*2 பிரமலிங்கசாமி திருப்பணி பிரமலிங்க*

*3 கவுண்டன் மகன் குள்ளக் கவுண்டன்*

*4 றாவுத்த கவுண்டன் மகன் பிரம*

*5 லிங்கக் கவுண்டன்*

*6 இருவரும் உபையம்*

# 9. அத்தாணி கெட்டிமுதலியார் கல்வெட்டு

செ. இராசு, தஞ்சாவூர்

பெரியார் மாவட்டம், பவானி வட்டம் அத்தாணி செல்லாண்டியம்மன் கோயிலில் இக்கல்வெட்டு உள்ளது. தாரமங்கலம் கெட்டி முதலியார் காலக் கல்வெட்டு. காலம் 1687 ஆகலாம். பெருமாள் தீட்சிதர் செங்கோல் செலுத்தியது கூறப்படுகிறது. இச்செய்தி வேறு கெட்டி முதலியார் காலக் கல்வெட்டுக்களில் கூறப்படாத செய்தியாகும்.

*1 பிறப வருஷம் வைகாசி மீ 19உ ஸ்ரீ மது முதலியார் நல்லுடையப்பர் குமார கட்டி முதலி*

*2 யார் காரியத்துக்கு கற்தரான பெருமாள் தீட்ஷதர் செங்கோல் செலுத்தி அருளாயி நின்ற காலத்தில்*

*3 வடகரை நாட்டில் அத்தாணியிலிருக்கும் வெள்ளாழரில் வாணகுலரில் நல்லாக் கவுண்டர்*

*4 மகன் சின்னப் பெரியண கவுண்டர் தேவதேவ தேவோத்தமி பத்திரி கொண்ட*

*5 த்து செல்லாண்டியம்மனுக்கு அர்தமண்டப முண்டாக்கினேன். அடியேன் சின்ன*

*6 பெரியான் விண்ணப்பம்*

# 10. வெளியன்குடிப்பட்டி, சாத்தனூர் கல்வெட்டுக்கள்

சீ. இலட்சுமணன், சிங்கம்புணரி

ப. மு. தேவர் மாவட்டம் திருப்பத்தூர் வட்டம் பொன்னமராவதி செல்லும் வழியில் வா. புதூர் அருகில் வெளியன்குடிப்பட்டியில் உள்ள சிவாலயத்தில் இடிந்த மகாமண்டபத் தூண்களில் இக்கல்வெட்டுக்கள் உள்ளன. இவை குறித்து மேலைச்சிவபுரி தமிழ்க்கல்லூரி மாணவர் திரு. சிங்கமுத்து வார்பட்டு தகவல் அளித்தார்.

*10.1*

*ஸ்வஸ்திஸ்ரீ*
*பண்டுதன் சுந்*
*தரத் தோளுடையாந் பு*
*றமலை னாட்டு மாணி கால்*

*10.2*

*உடையாந் நாட்டாந்*
*நாட்டின கால்*

*10.3*

*ஸ காவனத்......*
*னான குருகுலத்தரை*
*ய னாட்டின கால்*

*10.4* சாத்தனூர் திருவாளுவ ஈசுவரன் கோயில் கல்வெட்டு

இராமநாதபுரம் மாவட்டம் திருவாடானை வட்டம் ஆனந்தூர் அருகில் உள்ள சாத்தனூர் திருவாளுவ ஈசுவரன் கோயில் நுழைவாயில் நிலையின் மேல் இக்கல்வெட்டு உள்ளது. சாத்தனூர் நிலக்கிழார் திரு. பொ.க.சே. பொன்னுச்சாமி அவர்கள் அளித்த தகவலின் பேரில் இக் கல்வெட்டுப் படி எடுக்கப்பட்டது.

12ஆம் நூற்றாண்டில் பாண்டிய அரியணை தொடர்பாக இலங்கை மன்னனுக்கும் சோழ அரசன் இரண்டாம் இராசாதிராசனுக்கும் மூண்ட பெரும்போரில் பங்கேற்ற குறுநிலத்தலைவர்களுள் குறிப்பிடப்பட்ட அஞ்சுகோட்டை நாடாழ்வார்களில் ஒருவரின் மனைவி இக்கல்வெட்டில் குறிப்பிடப்படுகிறார். கல்வெட்டு சிதைந்துள்ளது.

*1 சுவஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ வீரபா[ண்டிய] தேவற்கு யாண்டு..... ...... திருக்கானப்பேர்க் கூற்றத்து*

*3 சாத்தனூர் வாளுவ ஈச்வரமுடைய நாயனார்க்கு திருப்படிமாற்றுள்ளி*

*4 ட்ட நிமந்தங்களுக்குக் காவன் கங்கை கொண்டானான அஞ்சுகோட்டை நாடாழ்வார் தேவி*

*5 ... வாளுவநம்பனான மங்கையர்க்கரசியார் பழையனூர்*

*5 ... வாளுவநம்பனான மங்கையர்க்கரசியார் பழையனூர் நாடாழ்வார்களான அரையர்கள் பக்கல் காரா ........*

# 11. திருமண்டங்குடி வரி எதிர்ப்புக் கல்வெட்டு

து. கங்காதரன், பழனி

தஞ்சாவூர் மாவட்டம் பாபநாசம் வட்டம் திருமண்டங்குடியில் உள்ள சிவன்கோயில் கருவறை வடக்கு, மேற்கு மற்றும் தெற்கு சுவர்களில் இது பொறிக்கப்பட்டுள்ளது. இவ்வூர் கும்பகோணம் திருவையாறு சாலையில் இருந்து 4 கிமீ வடக்கே தள்ளி உள்ளது.

இக்கல்வெட்டு 13ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் சோழ நாட்டில் நிலவிவந்த வரிப் பளுவைப் பற்றியும், அதனால் உழுகுடிகள் பெரிதும் பாதிக்கப்பட்டதையும் தெரிவிக்கிறது.* வரி வசூல் செய்த படைவீரர் (வன்னியர்) நியாயமான கடமை, குடிமைகள் தவிர மேற்கொண்டும் பல "குடிமைகளைச்" செலுத்துமாறு கட்டாயப்படுத்தினர். இதனால் திருநறையூர் நாட்டு அகரம் இராசராச சதுர்வேதிமங்கலத்துச் சபையார் அவ்வட்டாரக் குடிகள் தெரிவித்த எதிர்ப்பின் மீது சில வரிகளைக் குறைத்துத் தருவதாக முடிவு செய்கின்றனர். (காணியாளர் அல்லது நில உடமையாளரான) பட்டர்கள் கொடுக்கவேண்டிய வரித்தொகைக்காக அவர்களுடைய குடிகள் (அல்லது குத்தகைதாரர்கள்) முறையின்றிக் கைது செய்யப்பட்டார்கள் என்று வரி மூன்றில் சொல்லப்படுகிறது.

*11.1* இடம்: திருபுவனேசுவரசுவாமி கோயில் கருவறை வடசுவர் தொடங்கி மேற்கு, தென் சுவர்வரை எழுதப்பெற்றுள்ளது.

காலம்: சோழன்மூன்றாம் ராஜராஜன், கி.பி. 1231 ஏப்ரல் 30.**

---

* இதே காலத்தைச் சேர்ந்த இதுபோன்ற கல்வெட்டுக்கள் மன்னார்குடி முதலிய ஊர்களிலும் உள்ளன.

** காலக் கணக்கீட்டுக்கு உதவி செய்த குடந்தை திரு. ந. சேதுராமன் அவர்களுக்கு நன்றி

1 ஸ்வஸ்திஸ்ரீ திருபுவநச்சக்கரவர்த்தி ஸ்ரீராஜராஜதேவற்கு யாண்டு 15 ஆவது இஷப நாயற்று அமரபக்ஷத்து துவாதெசியும் புதந்கிழமையும் பெற்ற ரேவதி நாள் குலோத்துங்க சோழவளநாட்டுத் திருநறையூர் நாட்டு அகரம் சிரிஇராசராச சருப்பேதிமங்கலத்து ... உடையார் கோயிலிலே தந்மி செ... கொட்டி கூட்டங் குறைவறைக்கூடி இருந்த ........

2 நாட்டு குடிமக்களுங் கண்டு நம்மூ[ரவருங்] கண்டு வன்னியர் பற்றி கடமை குடிமை தண்டுகிற இடத்து முன்வரும்படி அன்றிக்கே குடிமைகளை ஏறகொண்டுமே காசுதண்டியும் பட்டகள் பேரில் வரிகளை எங்களை தண்டியும் இப்படி செய்கையாலே தரிப்பற்று பயிரேற்றி... னூற்று பத்திரண்டு மரமு... பட்டகள் குடியிருப்பு நிலம்... நீக்கி மடக்கு நிலம் னூற்றுபதுப...

3 ாநறும் குடிமை கொள்ளுமிடத்து பெரியதேவர் காலத்து உடையார் திரிபுவனவீரீசுரமுடையார் கோயிலுக்குத் திருநாளுள்ளிட்ட கோயில் குடிமைசெய்யவும் காவேரிக்கரை உள்ளிட்ட செந்நீர்வெட்டி செய்யவும் பட்டகள் பேராலே வரிக்கு எங்களைப் பிடியா தொழி...மைக்கா சென்றெங்கள் பொ.... ண்டு தண்டாதொழியவும் மற்று மகாசுவற்கமென்...

4 இதுக்கு மேல்ப்பட தேவைகள் செய்யக் கடவதல்லாதாக....ம் கரை செயுமிடத்து ஒராட்டைநாள் நின்று தவிர... [கந்தம நபு?] நாலாட்டை நாள்கழிச்சு ஊருக்கிசையக் கரையிடக் கடவதாகவும் இப்படித்தவிரச் செய்தார்களாகில் கிராமத் துரோகிகளும் நாட்டுத் துரோகிகளுமாகவும் இப்படி..... வுத்தமையில் இப்படி செய்ய..... மடத்துமுந்பு குடிமை தவிர எழுதிந விவதாபத்திரப்படியும்

5 ... துமாவிலே தேவை செய்யகடவதா... நடுமை இப்படி செய்க.... இவர்களருளிச் செய்த [நதமந?]கல்... நென் இவை எந்எழுத்து... இப்படிக்கு மகாசவையாரும் உடையாரும் எழுதி எழுத்திட்ட மகாசபையார் நி.... கட்பட்ட கல்வெட்டித்து: பேரால்.... ண்டுமற்ற.... சேநலூர் திருசில்நாயக பட்டஸ்ய புள்ளுதேவர் இவை என்

6 ..... ங்களும் இ..... அகுவூர் தெக்கணாந்சை தில்லை கரை... சை திரூர் பூவனூர் மகா.... பிராந்பட்ட..... திருச்சிற்றம்பலமு.... பட்ட ஆகி

7 .....நாயகபட்டஸ்ய முத்திபட்டஸ்ய

8 இப்படிக்கு மகாஅகுவூர் தெக்கணா சித்திபட்டஸ்ய ராயூர்ச் சொட்டை அகிலநாயக பட்டஸ்ய

9 செநலூர் திருச்சிற்றம்பலமுடையான் பட்டஸ்ய பெருமருதூர் நச்சிநார்க்கிநியந் பட்டஸ்ய

10 புள்ளூர்தேவர்... வணாசபட்டஸ்ய இராயூர் சொட்டை வினாயக
பட்டஸ்ய

11 கணமற்று பிராந் அதிராதியாஜி நல்ல திருக்கடவூர் சபாபதி
பட்டஸ்ய நினம்பை நிலக்கிரிபட்டஸ்ய

12 பூவனூர் மகாதேவ பட்டஸ்ய அட்டாம்புறத்து மகாதேவபட்டஸ்ய
சாந்தூர் விநாயக பட்டஸ்ய பெருமருது சூரிய தேவபட்டஸ்ய

13 கணஞ்சை திருநட்டமாடி பட்டஸ்ய கராமடிசெட்டி கந்தாடை
மகாதேவ பட்டஸ்ய

14 ......... ஞ்சை தில்லைநாயக பட்டஸ்ய இராவி ஆழ்க்கொண்ட
வில்லி பட்டஸ்ய.

# 12. விஜயரகுநாத சேதுபதியின் நயினார் கோவில் கல்வெட்டுக்கள்

**எஸ்.எம். கமால்,** இராமநாதபுரம்

இராமநாதபுரத்திற்கு வடமேற்கே 23 கிமீ தொலைவில் உள்ள திருமருதூர் என்ற நயினார் திருக்கோவிலில் முத்து இராமலிங்க விசையரகுநாத சேதுபதியின் (கி.பி. 1762-1795) கல்வெட்டு இரண்டு கட்டுரையாளரால் அண்மையில் கண்டுபிடிக்கப்பட்டு படி எடுக்கப்பட்டன. சேதுபதி மரபினரில் இறுதி மன்னரான இவர் பல சிற்றூர்களை திருக்கோயில்கள், திருமடங்கள், அன்னசாலைகள் ஆகிய நற்பணிகளுக்கும் வடமொழி தென்மொழி வித்தகர்களுக்கும் சர்வமான்யங்களாக வழங்கி அழியாப்புகழ்கொண்டார். கி.பி. 1784 இல் இந்த மன்னர் சிதிலமான நயினார்கோவிலின் கர்ப்பகிருகம், அர்த்தமண்டபம், விமானம் ஆகியவைகளை நிர்மாணித்து சுவாமியை, பாலாலயத்தில் ஒரு மண்டலம் எழுந்தருளச் செய்து அபிஷேகம் முதலிய சைத்தியோபசாரங்கள் செய்து முடித்தபிறகு சுவாமி, பிரதிட்டையும் அட்டபந்தனமும் மூலாலயத்தில் கும்பாபிஷேகமும் செய்வித்தார் என்று சொல்கிறது முதல் கல்வெட்டு. இரண்டாம் கல்வெட்டு தென்சுவர் அதிட்டான முப்பட்டைக் குமுதத்தில் உள்ள துண்டுக் கல்வெட்டு. இது திருப்பணி வேலையை மேற்பார்வை செய்தவர் சேராவயல் குண்டல தீச்சதர் அய்யன் மகன் என்றும் திருப்பணி செய்த தச்சர் முத்துக்கருப்பன் ஆசாரி என்றும் தெரிவிக்கிறது.

### *12.1* கருவறையின் தெண்புறச்சுவரில் உள்ள கல்வெட்டு

1 உ. ஸ்ரீ சாலிவாகன சகாப்தம் 1706 கலி

2 வருசம் 4885 இதன் மேல் செல்லா நி

3 ன்ற குரோதிநாம சம்பவத்சரத்தில் மேகந்த

4 ண்ட ரிதுவில் மகர மாஸத்தில் கிருஷ்ணபட்சத்து

5 தசமியும் புரசுவாஸரமும் அங்காரக நட்ச

6 த்திரமும் ஹர்ஷண நாம யோகமும் பவகரணமும்
7 கூடிந சுபதினத்தில் ராஜஸ வேளையில் கும்
8 பலக்நத்தில் மருதவனத்துக்குப் பிரதி நாமம
9 ரன நயினார்கோயில் நாகநாத சுவாமிக்கு கர்ப
10 கிரகம் அர்த்தமண்டபம் சீரணோத்தரண
11 ம் செய்குறதற்கு ராசமானிய மகாராச ராசஸ்ரீ
12 முத்துராமலிங்க விசயரகுநாத சேதுபதி
13 காத்த தேவரவர்கள் ஆக்ஞாபிச்சு ராசமானி
14 ய ராசஸ்ரீ பிரதானி முத்திருளப்ப பிள்ளையவர்கள்
15 திருப்பணிக்கு முகுர்த்தஞ் செய்து முன்னிருந்து மா
16 னப் பிறாணம் கர்ப்பக்கிரஹம் அர்த்தமண்டபம் வான
17 முதல்ச் செய்து மேல் கருங்கல் விமானமுஞ் செய்
18 விச்சு ஒரு மண்டலம் சுவாமி நாகநாதர் பாலால
19 யத்தில் எழுந்தருளி அபிசேகம் நெய்வேதிநம் ஜபம்
20 ஹோமம் பிராமண போஜனம் முதலாகிய சையி
21 த்தியோபசாரங்களும் நடந்து சாமரிதுவில் மாலி
22 நமாசத்தில் சுக்லபட்சத்து தசமியும் பாநுவாசர
23 மும் புண்ய நட்சத்திரம் சங்கரராம யோகமும் கிரஹாவாக
24 ரணமும் கூடின சுபதினத்தில் சுவாமி பிரதிட்டையும் அஸ்ட்ட
25 பந்தநமும் மூலாலயத்தில் கும்பாபிசேகமும் நடப்பி ....

# 13. ஜம்புலிபுத்தூர் கல்வெட்டுக்கள்

எஸ். நாகராஜ், மதுரை

மதுரையிலிருந்து ஆண்டிப்பட்டி கடந்து வைகை அணை செல்லும் சாலையில் இவ்வூர் உள்ளது. இவ்வூரில் உள்ள கதலி நரசிங்கப்பெருமாள் கோயில் மகாமண்டபத்திலும், கிணறு, கொடிக்கம்பம், வாயில் மரக்கதவு ஆகியவற்றிலும் கல்வெட்டுக்கள் துண்டு துண்டாக உள்ளன. இவை 18ஆம் நூற்றாண்டு மற்றும் அண்மைக்காலத்தவை. கிணறு, கொடிக்கம்பம், தூண்களில் உள்ளவை தற்காலத்தவை. மரக்கதவுக் கல்வெட்டு கண்டமனூர் ஜமீன் தொடர்பானது.

*13.1* மகாமண்டபம் தென் சுவரில் உள்ள துண்டுக் கல்வெட்டு

1 .... ல் கீழ்மேல் இரண்டு கோல் தறை அ[ளவு]

2 வழிநடையாகக் கொள்ளவும் நெட்டூர்பட்டி

3 இவர்களுக்கு கடுந்த புஞ்செய்க்குப் பெருநான்

4 கெல்லையாவது கீழெல்லை வைகை

5 யாற்றுக்கும் தென் எல்லை இவ்வூர்க்கு...

*13.2* மரக்கதவின் சட்டங்களில் பொறிக்கப்பட்ட எழுத்து

**1850ல் ஸ்வஸ்தி ஸ்ரீ தமிள் சவுமிய வருஷம் மாசி மீ 12 உ குருவாரம் சம்புலிபுத்தூர்க் கதலிநரசிங்கப் பெருமாள் கோவில் குடவரைவாசல்க் கதவு செய்தது மகாராசராச ஸ்ரீகண்டமனூற் குத்தகை**

**அக்கமநாயக்கர் புதுப்பட்டி மகாறாசராச அக்கம நாயக்கற் மகாலிங்கம் செட்டியாற் றாமசாமி ஆசாரி [உத்தரம்] பூட்டுச்சங்கிலி ஆணி முறை வளையம் வேலை கோவில் பூசை மிச்சம் அயிவேசில் செய்தது**

* கல்வெட்டு இரண்டு, மூன்று எழுத்துக்களாகச் சட்டங்களில் மேலிருந்து கீழ்வரை பொறிக்கப்பட்டுள்ளது.

# 14. விருத்தாசலத்தில் வெங்கோசியின் கல்வெட்டு

ந.சந்திரகுமார், தஞ்சாவூர்

இக்கல்வெட்டை விருத்தாசலத்தைச் சேர்ந்த சுதந்திரப் போராட்ட வீரரான திரு. தி.சு கலியாணராமன் என்பவர் 1947 இல் படி எடுத்து வைத்திருந்தார்.

கடைசி தஞ்சை நாயக்க மன்னரான செங்கமலதாசு என்பாரிடமிருந்து ஏகோஜி என்றும் வெங்கோசி என்றும் அழைக்கப்பட்ட மராட்டிய மன்னன் 1676 இல் தஞ்சாவூரைக் கைப்பற்றினான். இவன் சிவாஜியின் ஒன்றுவிட்ட சகோதரனாவான். விருத்தாசலமும் அதன் சுற்றுப்புறப் பகுதிகளும், மராட்டியரின் ஆளுகைக்குட்பட்டிருந்தது என்பதை விருத்தாசலம் இரயிலடியிலிருந்து இரண்டு கல் தொலைவில் உள்ள இத்தனிப்பாறைக் கல்வெட்டு (கி.பி. 1688 ?) மெய்ப்பிக்கிறது. விருத்தாசலேசுவரர் கோயிலுக்கு வெங்கோசி மன்னன் 900 குழி நிலத்தைத் தானமாக அளித்ததைப் பற்றியது இது. தொள்ளாயிரம் தொன்னூறு எனக் குறிப்பிடப்படுவது மொழியாராய்ச்சிக்கு உதவும்.

1 ......
2 சேர்ந்த விப4 ஆனி மாதம் பதினைந்தாம் தேதி
3 திரையோதசி பூச நட்சத்திரம் பெற்ற
4 சோமவார நாள் ராயர் மஹாராயர் காரியத்திற்கு
5 கர்தரான வெங்கோசி [தத்து] விருதாசலேசு
6 வரசுவாமி நந்தவனத்துக்கு தோப்பு கீழ்
7 உள்ளூர் குழி ஐனூறு மணலூர் குழி நானூறாக
8 குழி தொன்னூறு இந்த தன்மத்துக்கு விஹாரம்
9 பண்ணின பேர்கள் கங்கை கரையில்
10 காராம் பசுவை கொன்ன தோஷத்திலே
10 போகக் கடவராக...... ...... ......

# 15. நத்தம் கல்வெட்டுக்கள்

சு. இராசகோபால், மதுரை
வெ. வேதாசலம், மதுரை

திண்டுக்கல் அண்ணா மாவட்டம் நத்தம் வட்டத்தின் தலைமை நகரமான நத்தம் இடைக்காலத்தில் ஒரு வாணிக நகரமாக விளங்கியது. அக்காலத்தில் மதுரை உறையூர் பெருஞ்சாலை இவ்வூர் மற்றும் துவரங்குறிச்சி வழியாகச் சென்றது என ஊகிக்க இடமுண்டு. இச்சாலை வழியே பல வாணிக நகரங்கள் இருந்துள்ளன. நத்தத்துக்கு வடக்கே சில கல் தொலைவில் உள்ள சமுத்திராபட்டியில் ஒரு வீரதாவளம் கல்வெட்டு கண்டுபிடிக்கப்பட்டது. (பார்க்க ஆவணம் 2. பக். 68). நத்தத்தில் உள்ள சில கல்வெட்டுக்களும் எறிபடை நல்லூர் நத்தத்தின் பழைய பெயராகக் குறிக்கின்றன. "எறிபடை நல்லூர்" வாணிகக் குழுவினரால் ஏற்படுத்தப்பட்ட ஊராகும்.

கீழே கொடுக்கப்பட்டுள்ள முதல் கல்வெட்டு அவ்வூரிலிருந்த நாநாதேசிகளான ஐஞ்ஞூற்றுவர் என்ற பெரிய வாணிகக் கூட்டைச் சேர்ந்தவர் வீரக்கொடியார் என்ற தம் அணுக்கப்படையினருக்கு ஏதோ கொடை செய்ததாகக் குறிப்பிடுகிறது. கல்வெட்டு சிதைந்துள்ளதால் இக்கல்வெட்டின் கருத்தை முழுவதாக அறியமுடியவில்லை. கல்வெட்டின் முதல் பத்துவரிகள் இவ்வாணிகக் கூட்டின் வழக்கமான மெய்க்கீர்த்தியைச் சுருக்கமாகத் தருகிறது.

இரண்டாம் கல்வெட்டு இவ்வூரைச் சேர்ந்த தனத்து மலையாளரில் ஒருவரான தமர்கூத்தன் கோயிலுக்கு நிலம் விற்றதைக் குறிப்பிடுகிறது. தனத்து மலையாளர் மலையாள நாட்டிலிருந்து வந்து குடியேறிய வாணிகர் ஆக இருக்க வேண்டும். இவர் வேறுசில உள்ளூர் வியாபாரிகளிடம் நிலத்தை வாங்கி வைத்திருந்ததாகத் தெரிகிறது. மூன்றாம் கல்வெட்டில் கொடும்பாளூர் வாணிகக் கிராமத்தைச் சேர்ந்த ஒருவர் (வாணிகர்) செய்த கொடை பற்றியது. கல்வெட்டு பெரிதும் சிதைந்துவிட்டது.

நகரம், வாணிகக் கிராமம் அல்லது மணிக்கிராமம், அஞ்சுவண்ணம், வீரதாவளம், எறிபடைநல்லூர், எறிவீர பட்டினம், ஆகியன வாணிக ஊர்களின் பெயர்களாகும்.

**15.1 நத்தம் கோவில்பட்டி கடைத்தெருவில் கிடந்த கல்லில் இரு பக்கங்களிலும் உள்ளது. இக்கல் இப்பொழுது மதுரை தி.நா. மகால் அருங்காட்சியகத்தில் உள்ளது.**

*பக்கம் 1*

*1 ஸ்வஸ்தி ஸ்ரீ பு$_4$வநாச்$_0$ரய*
*2 பஞ்ச ச$_0$தச$_0$ாஸன லக்ஷண லக்ஷ்மி*
*3 வக்ஷஸ்தல பு$_4$வந பராக்ரம ஸ்ரீவா*
*4 ஸுதே$_3$வ கன்மஸ்ரீ மூலபத்ரோற்*
*5 பவ ஸ்ரீ அய்யபொழில் புரபரமேச்$_0$வரி*
*6 மக்களாகி ஸ்ரீதே$_3$வியே துணைவராகி அறம் வளர*
*7 க்கலிபெயர திக்கனைத்தும்*
*8 பெய்து செ[illegible]ன்னாகவும்*
*9 மஸ்த ராச்சியத்து மண்ட$_3$லத்து ஸ*
*10 மைய தன்மை இனிது நடார்த்து*
*11 கின்ற துவாரபதிநாட்டு எறிபடை*
*12 நல்லூர் நானாதேசியள் அறநெறி அ*
*13 ஞ் னூற்றுவந் காவணத்தில் கூடி நிரவிய நான்*
*14 கு திசைப்பதிநெண் பூ$_4$மி தேசித் திசை விளங்*
*15 கு திசையாயிரத்தைஞ்னூற்றுவரும் பலமண்*
*16 டலங்களில் னாட்டுச் செட்டிகளும் தன்ம*
*17 ச் செட்டிகளும் பதின்னெண் பூ$_4$மி வீரகொடி*
*18 யாரில் செம்பியன் சேனாபதி யாண்டா*
*19 னும் வைகுந்த நாடாள்வானாந வ*
*20 லங்கை வீரகங்கை பிள்ளையும்*
*21 இராசாதிராச வலங்கை நப்பொ*

*பக்கம் 2*

*22 ற்பதி*
*23 யும் எழு ............*
*24 றநும் கொ ............*
*25 உபையமா இத்தளத்தில் தி ............*

26 ஞ்ஞூற்றுவரும் துவராபதி வேளா .........

27 புத்திரனாரும் அழகிய பாண்டியப்படையா ..........

28 ----ரை வீரக்கொடியாரை நோக்கிப் புரவு செய்த

29 மயில் பாண்டித்தரையனும் தான் வீர

30 -- -- -- -- -- --

31 கல்லுநாட்டி கல்மேல் செய்தபடி

32 னாபதி---- நாடானுக்கு வழிவகை ........

33 ட்டாலே .... இத்து இக்கல்

34 ...... ெந உன்னாக்கட ........

35 ........க்கு---

36 எப்பேற்பட்டதும் பதிந்தெ .......

37 ர...... செய்யக்கடவ ........

38 ளஞ் செய்தோம் தேசிவல்ல ..........

39 யிரத்தைஞ்நூற்றுவரோம் இந்திரவி பு ...........

40 கைய வினாமுறையாலும் கை ..........

41 கைய் வினாமுறையாலும் பலமண்டல

42 வாரியர் கைய் வினா முறைமையாலும்

43 கல்நாட்டிக் குடுத்தோம் இந்திரவித்திஐ ..........

44 ற்றுவரும் பல மண்டலங்களில் நாட்டுச் செட்டிக

45 ளும் பதினெண் பூமி வீரக்கொடியோம் நிரவிடை வே

46 ளைக்காறன் நானாதேசியத் தானைசெட்டி எழுத்து

## 15.2 நத்தம் கைலாசமுடையார் கோயில் வடபுறச்சுவர் காலம் கி.பி. 1228

1 ஸ்வஸ்தி ஸ்ரீ திருவாய் கேழ்விக்கு மேற் திரி புவனச் சக்ரவத்தி

2 திகள் சோணாடு வழங்கியருளிய ஸ்ரீ சுந்தரபாண்டிய தேவற்கு யா

3 ண்டு 11 ஆவது எதிராமாண்டு துவாரபதி நாட்டு எறிபடை நல்லூர் தனத்தும

4 லை யா [ளரில்] தமர்கூத்தனேன் மேற்படி யூர் அகரப்ப்ர ஹ்மதேயம் சுந்தர சோழச்

5 சதுர்வேதி மங்கலத்து சீகயிலாயமுடைய சிவப்பிரகாச ஈச்வரமுடைய நாயனா

6 ர் சீ கோயிற் ஆதி சண்டேசுரப் பிள்ளையார் சீ கோயிற் கோயிற் தேவகன்மிகளுக்

7 கு விற்றுக்குடுத்த நிலவிலையாவணக் கையெழுத்து கற்கடக நாயிற்று பதி

8 ன் மூன்றாந்தியதியும் அபர பக்ஷத்து தசமியும் பெற்ற காற்த்திகை நாள் நான்வி

9 ற்றுக் குடுத்த நிலமாவது எங்கள் பிதாக்கள் இம்மடிகை மல வியாபாரி ஆல

10 த்துடையாள் நம்பி பிச்சன் பக்கல் விலை கொண்டுடைய விரபுரந்தரனென்று

11 பேர் பேர் சொல்லப் பட்ட குளத்துக்கு பெருநான் கெல்லையாவது

12 கீழ் பாற்கெல்லை உய்யவந்த சோழச் சது வேதிமங்கலத்

13 து குளத்து நீர் கோவைக்கு மேற்கும் தென்பாற் கெல்லை .........

14 லுக்கும் கற்குவியலுக்கும் வடக்கும் மேற்பாற் கெல்லை மலை

15 – 20 ......

21 படு பொதும்பும் மற்றுமெப்பேற்பட்டனவும் உட்பட இவ்வூர் வியாபாரி மரு

22 த்துவத்துடையான் உடையாநம்பியான கன்னி நாடுடைய பக்கல் .........

23 இது கேத்திரன் சீராமனான செயங்கொண்ட பாண்டிய

24 பல்லவதரையன் தற்குறியானமைக்கு தற்குறி மாட்

25 டெறிந்தேன் சீராமன் கோவிந்தனெழுத்து

## 15.3 நத்தம் பள்ளிவாசலில் உள்ள துண்டுக் கல்வெட்டு

1 ஸ்ரீ த்ரி புவனச் சக்ரவத்திகள் ஸ்ரீ வலப தேவற்கு யாண்டு

2 ....... டிகைத் துவாரபதீச்0வரமுடையார் கோயிலில் சேனுலூர்..........

3 பரான ஆதிச்சண்டேச்0வரனேந் கொடும்பாளூர் வணிக் கிராமத்

4 ராரான சீங்கரணாலையந் பள்ளியறை நாச்சியாரை யெழுந்தருள ............

# 16. இரு அளவுகோல்கள்

கொடுமுடி சண்முகன், மாமல்லபுரம்

## 16.1 திருக்கோவலூர் அளவுகோல்

திருக்கோவலூர் தெற்கு மாடவீதியிலிருந்து புலவர் கண்ணன் வீட்டு வழியாகச் சென்றால் கழனி வழி வரும். கழனியில் நரிக்கல்லுப் பாறையில் ஓர் அளவுகோல் வெட்டப்பட்டுள்ளது. கோலின் ஒரு பக்கம் சங்கும் மறுபக்கம் சக்கரத்தாழ்வாரும் வெட்டப்பட்டுள்ளன. கோலின் நீளம் 26 அடி, 11 1/4 அங்குலம் (8.21 மீ) கோலின் மேலும் கீழும் உள்ள கல்வெட்டில் "பத்துரண்டு அடிக்கோலால்" என்ற பகுதி காணப்படுகிறது.

## 16.2 இராயவிபாடன் கோல்

*பண்ருட்டி கடலூர் செல்லும் வழியில் அமைந்துள்ள திருக்கண்டேசுவரம் கோயிலில் மகாமண்டபத்தில் ஒரு கோல் அளவு உள்ளதை அனந்தபுரம் கிருட்ணமூர்த்தியும் கடலூர் அருங்காட்சியகக் காப்பாளர் திரு. காந்தியும் கண்டு செய்தி அறிவித்தனர்.*

*இக்கோலின் நடுவே "இராயவிபாடன்" என்று எழுதப்பட்டுள்ளது. விசயநகர மன்னர் காலம். கோலின் நீளம் 5.76 மீட்டர் 1.44 மீட்டர் நீளங்களில் உள்பிரிவுகள் குறிக்கப்பட்டுள்ளன. இது சுமாராக 27 விரல் கோலால் 6 கோல் நீளம் ஆகும்.*

# 17. பஞ்சாணம் உரல் கல்வெட்டு

கொடுமுடி சண்முகம், மாமல்லபுரம்

செஞ்சி வட்டம், மேல்ஒலக்கூர் அருகில் பஞ்சாணம் பாறையின் அருகில் பசுமலை சமவெளியில் ஒரு கன்னிமார் கோயில் உள்ளது. அங்கு பாறையில் ஓர் உரல் வெட்டப்பட்டுள்ளது. உரலின் அருகில் உள்ள கல்வெட்டு இது. காலம் *14 - 15* ஆம் நூற்றாண்டு.

*1 ஸ்வஸ்தி ஸ்ரீ*
*2 இன்த உரல்*
*3 வீரானாமேலூர் இருக்கும்*
*4 பள்ளிகளில் வீராடை மகன்*
*5 உலகாநல் ஆண்டான் மகன்*
*6 நண்டை*
*7 பரை பரமாண்டை தன்மம்*

# 18. மாமரத்துப்பட்டிக் கல்வெட்டுக்கள்

இரா.ப. கருணானந்தன், கோவை

கரூர் வட்டம் அரவக்குறிச்சிக்கு அருகில் மாமரத்துப் பட்டி என்னும் ஊர் உள்ளது. இவ்வூரில் நத்தக்காடு என்ற சாம்பல் மேட்டில் கீழ்ப்பகுதியில் சிவன்கோவில் ஒன்று பாழ்பட்ட நிலையில் உள்ளது. இக்கோவிலில் இதுவரை படியெடுக்கப் பெறாத சில கல்வெட்டுக்கள் உள்ளன.

கோவில் கருவறை இடை மண்டபம், முன் மண்டபம் முதலியவற்றுடன் திகழ்கிறது. அதிட்டானம், தூண்கள் மட்டுமே கல் திருப்பணி, பிற செங்கல் கட்டடம். அதிட்டானத்திலும், தூண்களிலும் கல்வெட்டுக்கள் உள்ளன. சோழர் காலத்தைச் சேர்ந்த அழகிய கொற்றவை, சண்டி முதலிய சிற்பங்களும் கோவிலுக்கு அணிசேர்க்கின்றன.

மூன்று கல்வெட்டுக்கள் கொங்குச்சோழன் வீரராசேந்திரன் (1207-52) காலத்தைச் சார்ந்தவை. எஞ்சிய ஒன்று உம்மத்தூர் அரசன் வீர நஞ்சராய உடையார் கல்வெட்டு. வீரராசேந்திரனின் 5ஆம் ஆண்டுக் கல்வெட்டு கோவில் அமைப்புப் பணியைப் பற்றிப் பேசுவதால் இக்கோவில் இம்மன்னரின் காலத்தில் கட்டப்பட்டிருக்கலாம்.

கல்வெட்டுக்கள் ஊர்ப்பெயரை தென்கரை மணலூரான தலையூர் நாட்டு வேளாபூண்டி என்று அழைக்கின்றன. கோவிலுக்குச் சிறிது தொலைவில் வேலாம் பூண்டி என்ற பெயரில் சிற்றூர் உள்ளது. இது பழைய வேளாபூண்டியாகலாம்.

கயிலாய்முடையார் கோவில் என்று அழைக்கப்படும் இக்கோவில் கருவறை வாசலை வேம்பிலான ஜயங்கொண்ட சோழபுரத்தைச் சேர்ந்த வாணிகன் துக்கை உபையம்புக்கான் என்பான் செய்து அளித்துள்ளான். துறையூர் ஊரைச்சேர்ந்த முத்தன் என்பவனுடைய மகன் நடுவிலோன் என்பான் கோவிலில் மாலை விளக்கு எரிப்பதற்காக 10 கழஞ்சு பொன் கொடையளித்துள்ளான். அழகிய சோழ காமிண்டன்

என்பவனும் இதேபோன்று மாலைநேரத்து விளக்கு எரிக்க கழஞ்சு கொடையளித்துள்ளான். கோவிலில் குருக்களாகப் பணி புரிந்தவர் "குடமும் குச்சியும் கொண்டு படிகடந்து கோவில் புகுவான்" என்று சுட்டப்படுகிறார்.

வீர நஞ்சராய உடையார் கல்வெட்டு அரசர் தம் (அரசு) பண்டாரத்துக்கு கோவில் செலுத்திய வரியில் குறைப்பு செய்ததைக் குறிப்பிடுவதாக ஊகிக்கலாம். கல்வெட்டின் கடைசிப்பகுதி கிடைக்கவில்லை.

**18:1 இடம்: கைலாசநாதர் கோயில் இடைமண்டப இடதுவாசல் கல்**
**காலம்: வீரராசேந்திரன் கி.பி. 1212**

*1 ஸ்வஸ்தி ஸ்ரீ வீ*
*2 ர ராஜேந்திரதே*
*3 வற்கு யாண்டு அ*
*4 ஞ்சாவது ஆளு*
*5 டையார் ஸ்ரீ கயி*
*6 லாயமுடையார்*
*7 கோயிலில் திருநி*
*8 லைகால் இடுவி*
*9 ச்சேந் வேம்பி*
*10 லாந ஜயங்*
*11 கொண்ட சோழ*
*12 புரத்தில் வியா*
*13 பாரி துக்கை உ*
*14 வையம்புக்க*
*15 ரந் 11*

**18.2 இடம்: கோயில் கருவறை மேற்கு அதிட்டானம்**
**காலம்: வீரராசேந்திரன் கி.பி. 1228**

*1 ஸ்வஸ்திஸ்ரீ வீரராசேந்திர தேவற்கு யாண்டு இருபத்தொந்றாவது வேளாபூண்டி ஆளுடையார் ஸ்ரீ கயிலாய உடைய மஹாதேவர்க்கு ஒறையூர் முத்தந் மகந் நடுவிலோநேந்*

*2 சந்தி விளக்கு ஒந்று [பத்து] வா... கழஞ்சு இக்கோயில் காணி உடைய சிவப்பிராமணன் ஆண்டபிள்ளையேந் கைக்கொண்டேந் சந்திராதித்தவரை செலுத்தக்கடவோம்*

*3 இக்கோயில் குடமுங் குச்சியும் கொண்டு படிகடந்து புகுவாந் விளக்கு எரிப்பாந்... பன்மாஹேசுரரக்ஷை*

18.3 இடம்: தூண்மண்டபம் தெற்கு அதிட்டானம்
காலம்: வீரராசேந்திரன், கி.பி. 1220

*1 ..... வீரராசேந்திர தேவற்கு யாண்டு பதிந்மூந்றாவது வேளாபூண்டியில் ஆளுடையார் சீ கையிலாமுடையாற்கு வெள்ளரிபூ*

*2 .... நாந அழகிய சோழ காமிண்டந் சந்தியா தீபம் விளக்கு ஒந்றுக்கு... கழஞ்சும் குடுத்து... உடைய*

18.4 இடம்: கோயில் கிணறு அருகே தனிக்கல்
காலம்: வீரநஞ்சராய உடையார், கி.பி. 1493?

*1 பரிதாபி வருஷம் மார்கழி மீ 2 தி சுபத்திஸ்ரீ*
*2 வீரநஞ்சராய உடையார் தென்கரைம*
*3 ணலூரரான தலையூர் நாட்டு வேளாபூண்*
*4 டியில் ஆளுடைய சீ கையிலாயமு*
*5 டைய மாதேவற்கு குடுத்தபடியாவது வேளா*
*6 பூண்டியார் நம்மிட பண்டாரத்துக்கு இறுக்*
*7 கிற இலக்கத்தில் கந்தாயத்திலே பத்துபொன்னு*
*8 ..... .....*

# 19. நாகபட்டினம் சூடாமணி விஹாரத்தைச் சேர்ந்த ஒரு புதிய புத்தர் படிமம்

எ. சுப்பராயலு, தஞ்சாவூர்

1992 அக்டோபர் மாதம் தோக்கியோவில் இதெமித்சு நுண்கலைகள் அருங்காட்சியகத்தில் அமெரிக்கச் செல்வந்தர் மூன்றாம் ராக்கஃபெல்லருக்குச் (Rockefeller III) சொந்தமான கலைப்பொருள்கள் சிறப்புக் கண்காட்சி ஒன்று நடைபெற்றது. அதில் வைக்கப் பெற்றிருந்த ஓர் அழகான புத்தர் வெண்கலப் படிமம் இதுவரை அறியப் படாத ஒன்றாக இருந்தது. அதன் தாமரைப் பீடத்தில் சுற்றிலும் ஒரு கல்வெட்டைக் கொண்டிருந்தது எதிர்பாராமல் கண்டுபிடிக்கப்பட்டது. இப் படிமத்தை மேற்போக்காகப் பார்த்தாலே இது சோழர்காலப் படிமம் என்று சொல்லிவிடலாம் (ஒளிப்படம் 1). இச் சிறப்புக் கண்காட்சி வழிகாட்டி நூலிலும் இது நாகபட்டினப் பகுதியைச் சேர்ந்ததாக இருக்கலாம் என்று ஊகிக்கப் பட்டுள்ளது[1]. இச் செப்புப் படிமத்தின் உயரம் 68.1 செ.மீ. புத்தர் தாமரைப் பீடத்தில் நின்ற நிலையில் வலக்கை வரந்தரும் முத்திரையுடனும் இடக்கை அபயம் தரும் முத்திரையுடனும் காணப்படுகிறார். உச்சந்தலையில் தாமரைப்பூ மொட்டு அல்லது தீப்பிழம்பு போல் கொண்டை உள்ளது. இப்படிமம் எப்படி ராக்கஃபெல்லர் கலைத் தொகுப்புக்கு வந்து சேர்ந்தது என்ற விவரம் தெரியவில்லை.

நாகபட்டினத்தில் மருந்துக்கொத்தள வீதி, வெளிப் பாளையம், நாணயக்காரத் தெரு என்று பல இடங்களிலிருந்து சுமார் 350 வெண்கலப் படிமங்கள் 1856 முதல் 1934 வரை

1. *Treasures of Asian Art form the Mr. and Mrs. D. Rockefeller 3rd Collection, The Asian Society, New York,* (Idemitsu Museum of Arts, Tokyo, 1992,) Plate 4

படிமத்தை நான் முதலில் பார்த்த பொழுது பேழைக்குள் வைக்கப்பட்டிருந்ததால் எழுத்துக்களைப் படிக்க முடியவில்லை. தகவலறிந்த பேராசிரியர் கராஷிமா அவ்வருங்காட்சியகக் காப்பாட்சியர் திரு. கனாசவா (Y.Kanazawa) அவர்கள் உதவியுடன் ஒளிப்படம் பெற்றுக் கொடுத்தார்.

இடைவிட்டுப் பல தடவை தோண்டி யெடுக்கப்பட்டன. இவற்றில் மூன்றில் இருபகுதிப் படிமங்கள் இந்தியாவிலும் வெளிநாடுகளிலும் (கல்கத்தா, பாட்னா, நாக்பூர், பம்பாய், லக்னோ, ஸ்ரீநகர், பரோடா, குவாலியர், கொழும்பு, கராச்சி, டாக்கா, ரங்கூன், லண்டன் முதலிய நகரங்களில்) உள்ள அருங்காட்சியகங்களுக்கு அன்பளிப்பாகக் கொடுக்கப்பட்டன என்று தெரிகிறது. எஞ்சியவை சென்னை அருங்காட்சியகத்தில் வைத்துப் பேணப்படுகின்றன[2]. இவையல்லாமல் வேறுசில படிமங்கள் தனியாரால் எடுக்கப்பட்டு இறுதியில் ராக்கஃபெல்லர் போன்ற செல்வந்தர்களைச் சென்றடைந்தன என்று கருதவேண்டியுள்ளது. இப்படிமங்களில் ஒருபகுதி புத்தர் திருமேனிகளாகவும், இன்னொருபகுதி போதிசத்துவத் திருமேனிகளாகவும் உள்ளன. சுமார் எண்பது படிமங்களில் அவற்றை அளித்தவர் பெயர்களோ அல்லது அப்படிமங்களின் பெயர்களோ அல்லது இரண்டும் சேர்ந்தோ பொறிக்கப் பட்டுள்ளன[3]. எ.டு. கவராண்டி, ஆத்தூர் சாரிபுத்திர நாயகர், புத்துடையான் பெருமாள் நாயகர் முதலியன. நாயகர் அல்லது ஆழ்வார் என்ற சொற்கள் புத்தர் அல்லது போதிசத்துவரைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளன. ஒருசிலவற்றில் தேவர், பெருமாள் போன்ற பெயர்களும் உள்ளன. (இப்பெயர்களை ஆய்வதற்கு ஒரு தனிக்கட்டுரையே வேண்டும்.) ஒரு திருமேனி "சோழபெரும்பள்ளி ஆழ்வார்" எனவும், இன்னொன்று "சோழபெரும்பள்ளி வாயகர்" என்றும் பெயர் கொண்டுள்ளன. எழுத்தமைதியைக் கொண்டு மேற்சொன்ன இப் பொறிப்புக்கள் பெரும்பாலும் கி.பி. 1113ஆம் நூற்றாண்டுகளைச் சேர்ந்தவை எனலாம்.

ராக்கஃபெல்லர் தொகுப்புப் படிமத்தில்[4] கீழ்க்கண்ட எழுத்துப் பொறிப்பு பீடத்தைச் சுற்றிலும் இருவரிகளில் உள்ளது. எழுத்துக்கள் சுமார் கி.பி.1100ஐ ஒட்டியவை.[5]

---

2. இதன் முழு விவரம் அறிய பார்க்க: T.N Ramachandran, The Nagapattinam and Other Buddhist Bronzes in the Madras Museum, Government of Madras, 1965

3. மேலது படங்கள் XXIV - XXVII

4. ராக்கஃபெல்லர் தொகுப்பில் சோழர் கலைப் பணியைச் சேர்ந்த பார்வதி, இராமர், பிரம்மா, நடராஜர் ஆகிய வேறு சில அழகிய வெண்கலப் படிமங்களும் உள்ளன.

5. இவ்வெழுத்துக்கள் முதல் குலோத்துங்கன் கல்வெட்டு, பட்டய எழுத்துக்களைப் பெரிதும் ஒத்துள்ளன.

1. இராஜேந்த்ர சோழப் பெரும்பள்ளி அக்கசாலைப் பெரும்பள்ளி ஆழ்வார் கோயிலுக்கு திருவுத்ஸவம் எழுந்தருள ஆழ்வார். இவ்வாழ்வாரை எழு[ந்]தருளுவித்தார் சிறுதவூர் நாலாங் குணாகர உடையார்

2 ஸ்வஸ்திஸ்ரீ பதினெண் விஷையத்துக்கும் அக்கசாலைகள் நாயகர்

நாகபட்டினத்து வெண்கலப் படிமங்களில் இவ்வளவு நீளமான எழுத்துப் பொறிப்பு இதுவரை கிடைக்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. கல்வெட்டுச் செய்தி வெளிப் படையாக உள்ளது. அதாவது, இத் திருமேனி இராஜேந்திர சோழப் பெரும்பள்ளி அக்கசாலைப் பெரும்பள்ளியில் திருஉத்ஸவத்தில் எடுத்துச் செல்லப்படுவது; இதனைச் சிறுதவூரைச் சேர்ந்த நாலாங்குணாகர உடையார் என்பவர் செய்வித்தளித்தார்; அக்கசாலைகள் நாயகர் என்ற பெயருடைய இவ்வாழ்வார் பதினெட்டு விஷையத்தைச் சேர்ந்த யாவருக்கும் நாயகர் அதாவது அருள்பாலிப்பவர் என்பது கருத்து.

இதில் அக்கசாலைப் பெரும்பள்ளி என்பது இராஜேந்திர சோழப் பெரும்பள்ளியின் வேறு பெயர் என்றோ அல்லது இராஜேந்திர சோழப் பெரும்பள்ளியைச் சேர்ந்த ஓர் உட்பள்ளி என்றோ இருவகையாகக் கருதலாம். பெரும்பாலும் இரண்டாவது விளக்கம் சரியாக இருக்கலாம். அக்கசாலை என்பது பொற்கொல்லர், நாணயங்களைச் செய்பவர் ஆகியோரைக் குறிக்கும். அவர்களால் நிறுவப்பட்டதாலோ அல்லது அவர்கள் பேரில் நிறுவப்பட்டதாலோ இப்பள்ளி அக்கசாலைப் பெரும்பள்ளி என்று பெயர் பூண்டிருக்கும். இரண்டாம் வரியில் குறிக்கப்படும் பதினெண்விஷயம் எனப்படுவது இடைக்காலத்தில் தென்னிந்தியாவிலும் கடல் கடந்தும் அணிகலன்கள், வாசனைப்பொருள், குதிரை முதலிய பொருள்களில் வாணிகம் மேற்கொண்ட ஒரு பெரிய வாணிகக்கூட்டு. இது ஐநூற்றுவர் என்றும், பதினெண்பூமி என்றும் அழைக்கப்படும். அக்கசாலைத் தொழில் புரிவோர் தம் தொழில் அடிப்படையில் இயல்பாகவே இவ்வாணிகக் கூட்டோடு நெருங்கிய தொடர்புடையவர். அதனால்தான் இவ்வக்கசாலைகள் நாயகர் பதினெண் விஷயத்துக்கும்

அதாவது பதினெண் விஷயத்தார் யாவருக்கும் உரியவர் என்று எழுதப்பட்டுள்ளது.

இராஜேந்திரசோழப் பெரும்பள்ளி முதன்முதல் கி.பி. 1090இல் எழுதப்பட்ட முதற்குலோத்துங்கனின் சிறிய லெய்டன் செப்பேடுகளில் குறிக்கப்படுகிறது.[6] இச்செப்பேட்டில் வரி 67இல் இரு பள்ளிகள் சுட்டப்படுகின்றன. ஒன்று ராஜேந்திர சோழப் பெரும்பள்ளி. இரண்டாவது சைலேந்த்ர சூடாமணி வர்ம விஹாரமான ராஜராஜப் பெரும்பள்ளி. இவ்விரண்டுக்கும் அரசன் சில புதிய நிலஉரிமைகளைக் கொடுத்தான் என்பது இச் செப்பேட்டுச் செய்தி. முதல் ராஜராஜன் காலத்தில் ஸ்ரீவிஜய நாட்டு அரசன் சூளாமணி பந்மன் அச்சோழப் பேரரசன் அனுமதி பெற்று நாகபட்டினத்தில் எடுப்பித்த புத்தப் பள்ளி சூளாமணி பந்ம விஹாரமாகும்.[7] இதன் இன்னொரு பெயர் ராஜராஜப் பெரும்பள்ளி என்று சிறிய லெய்டன் செப்பேடு தெரிவிக்கிறது. ராஜேந்திர சோழப் பெரும்பள்ளி முதல் ராஜேந்திரன் (1012-1044) காலத்திலோ அல்லது முதல் குலோத்துங்கன் காலத்திலோ அதாவது 1090க்கு முன்பு எழுப்பப்பட்டிருக்க வேண்டும். முதல் குலோத்துங்கனுக்கும் இராஜேந்திரன் என்று விருதுப்பெயர் உண்டு. ஆனால் இந்தப் பள்ளியைப் பற்றிச் சிறிய லெய்டன் செப்பேடுகளில் வேறு செய்தி இல்லை. அந்த வகையில் இப்பொழுது கிடைத்துள்ள புத்தர் படிமத்தில் உள்ள பெயர் ஒரு புதிய விவரமாகும். நாகபட்டினம் சோழர் காலத்தில் ஒரு சிறந்த துறைமுகப் பட்டினமாக இருந்தது என்ற கருத்துக்கு இக் கண்டுபிடிப்பு மேலும் வலிமையூட்டுகிறது.[8]

---

6. **Epigraphia Indica**, Vol. 22, No. 34
7. **Epigraphia Indica**, Vol. 22, No. 35
8. மேலே குறிப்பிட்ட புத்தப் பள்ளிகளில் ஒன்று சீனபகோடா என்ற பெயரில் சென்ற நூற்றாண்டின் நடுப்பகுதி வரை நாகபட்டினத்தின் வடபகுதியான வெளிப் பாளையத்தில் வட்ட அலுவலக வளாகம் உள்ள இடத்தில் இருந்துள்ளது. 1867 இல் அரசு அனுமதியோடு தங்கள் இடவசதிக்காக யேசு திருச்சபையார் (Jesuits) இந்த அரிய பழஞ்சின்னத்தை தட்டித் தரைமட்டமாகி விட்டார்கள் என்பது மிகவும் வருந்தத்தக்க செய்தி (பார்க்க அடிக்குறிப்பு 2ல் சுட்டப்பட்ட நூல் மற்றும் Epigraphia Indica , Vol. 22, p. 229.)

நாகபட்டினம் சூடாமணி விஹாரத்தைச் சேர்ந்த
புத்தர் படிமக் கல்வெட்டு



# 20. சிங்கத்தாகுறிச்சி தொண்டைமான் செப்பேடு

இரா. இராமமூர்த்தி, விராலிமலை
கரு. இராசேந்திரன், மேலப் பனையூர்

புதுக்கோட்டை மாவட்டம் குளத்தூர் வட்டம் மண்டையூர் சிங்கத்தாகுறிச்சியில் சஞ்சீவிராயர் கோவிலில் உள்ள செப்புப் பட்டயம். விஜைய ரகுநாதராய தொண்டைமான், கி.பி. 1804இல் சஞ்சீவிராயசுவாமி கோயிலுக்கு குளத்தூர் சீமை ராசிபுரம் சேர்க்கையில் உள்ள பீடம்பட்டி (அல்லது பிடாம்பட்டி) என்ற ஊரை மானியமாகக் கொடுத்ததைப் பற்றியது.

பக்கம் 1

1 உ ஸ்வஸ்தி மன் மகா மண்டலேச்0வரன் அரியராயதளவிபாட
2 ன் பாஷைக்கு தப்புவராயர் கண்டன் மூவராயர் கண்டன்
3 கண்டர் கூண்டன் கண்டைய பிறதாபன் கட்டாரிச்சாளுவ
4 ன் கண்டநாடு கொண்டு கொண்டநாடு கொடாதன் ஒருபரிகொ
5 ண்டு திரள்பரிவெட்டு முபைய குலோத்துங்கன் எம்மண்ட
6 லங் கொண்டு யீளமுந் திறை கொண்ட ராசாதிராசன் ராசபர
7 மேச்0வரன் ராசமாத்தாண்டன் ராசகண்டிரவன் ராசாக்கள்
8 தம்பிரான் கோட்டத்து மன்னியர் கண்டன் சொரிமன்னிய
9 ர் சூரியன் கெடிமன்னியர் காலாந்தகன் தொண்டமண்டல
10 ஸ்தபனாசாரியன் சோழமண்டலப் பிறதிஷ்ட்டாபனாசரியன்
11 பாண்டி மண்டலத்து பத்மனாசரியன் படைகண்டு தத்தளிப்பார்
12 கள் கண்டன் பஞ்சபணாவதாரன் துலுக்கர் தளவிபாடன்
13 துலுக்கர் மோகந் தவிழ்த்தான் அரியர்தள விபாடன் அரியர்மோ
14 கந் தவிழ்த்தான் தொட்டியர் தளவிபாடன் தொட்டியர்மோ
15 கந் தவிழ்த்தான் ஒட்டியர் தளவிபாடன் ஒட்டியர் மோகந் தவி
16 ழ்த்தான் தற்க்காற்கு தற்க்கன் தற்க்கவினோதன் தண்டுவார் மி
17 ண்டன் சண்டப்பிறசண்டன் ஸகலகுணாபிராமன் துங்கா

18 பிராமன் துர்கரேபந்தன் சொல்லுக் கரிச்சந்திரன் வில்லு
19 க்கு விசையன் பரிக்கு நகுலன் குடைக்கு கற்னன்
பொறுமை
20 க்கு தற்ம்மர் புறுவ தெட்சண பச்சிம உத்தர ஸத்த ஸமுத்தி
21 ராதிபதி அசுபதி கெசுபதி தனபதி நரபதி நரவேட்டை கண்ட
22 ருளிய மல்லிகார்ச்சுன தேவமகாராயர் பிறபுடதேவமகா
23 ராயர் ஆனைகுந்திதேவ மகாராயர் விருப்பாச்சி தேவமகா
24 ராயர் கிஷ்ணதேவ மகாராயர் ராமதேவ மகாராயர் ரெங்
25 கதேவ ம
26 காராயர்
27 பிறுதிவி
28 ராச்சிய
29 ம் பண்ணியருளா நின்ற சாலிவாகன சாகார்த்தம் 1726
30 கலியுக சகார்த்தம் 4905 யிதின் மேல் செல்லாநின்ற
31 ரத்தாட்சி வருஷம் அர்ப்பிசி மீ 8 உ செதுர்த்தி
சோமவாரமும் ரோ
32 கினி நட்சத்திரமும் வயித்திரிதி நாமயோகமும் பாலவா
33 கறணமும் இப்படிக்கொத்த சுபதினத்தில் ராசராசவளநா
34 டு ராசேந்திர சோழ வளநாடு பண்டிசூள்நாடு அன்ம்பில் தெ
35 ற்க்குலூரிலிருக்கு காணியுடைய அரசர் மக்களில் இந்திரகு
36 லவங்குஷம் தென்கோடியர் தீபன் வடகரைப்பிலி வாகை
37 மாலை புயனான காசிபகோத்திரத்தில் விளங்கும் மது
38 திருமலைராய தொண்டமானார் பவுத்திரன் திருமலையப்ப
39 ராய தொண்டமனார் புத்திர ராச ராசவிசைய ரெகுனாத ரா
40 யபாதற்த் தொண்டமானார்ரவர்கள் சஞ்சீவிராய சுவாமி
41 கோவில் நித்தப்படிக் கட்டிளைப் பூசைக்கும் திருப்பணி
42 அபிஷேகம் நெயிவேத்தியம் அன்னதான முதலாகிய தற்ம்
43 மங்களுக்கு குளத்தூர்ச் சீமையில் ராசிபுரம்ஞ் சேற்க்கை
44 யில் பிடம்பட்டி கிறாம மூலமாக தம்பிரசாதன பட்டயம்
பண்ணி
45 கொடுத்தபடி தாம்பிரசாதனமாவது பிடாம்பட்டி நஞ்சை
46 புஞ்சை யெல்லைக்கி விபரம் கீள்பாக்கெல்லை யீசா
47 னிய மூலையில் ராசிபுரம் இசுரன்ங் கோவில் கட்டுக்கரை
48 கடவயலுக்கு மேற்க்கு யிதின் தெற்க்கு மேற்படி கட்டுக்கரை

---

* இங்கு தெலுங்கு எழுத்தில் ஸ்ரீராமஜெயம் உள்ளது.

49 கொள்வாயி மேல்மூலை ராயப்புடையான் கட்டுக்கரை மேல்வரப்பு

50 க்கு வடக்கு மூலைக்கி மேற்க்கு யிதின் தெற்க்கு அய்யான்ங்குட்டி பு

51 ஞ்சை தெற்க்கி மூலைக்கி மேற்க்கு தென்ம்பாக் கெல்லையாவ

52 து சிங்கத்தா குறிச்சி எல்லைக்கி வடக்கு பறையன் புஞ்சை

53 தெற்க்கு பொளிக்கி வடக்கு யிதின் மேற்க்கு வேப்படி புஞ்சைக்கு

54 தெற்கு பொளிக்கி வடக்கு யிதின் வடக்கி சிங்கத்தாகுறிச்

55 சி மூறானாயக்கன் புஞ்சை கீள்ப் பொளிக்கு கௌக்கு யிதின்மேற்

56 க்கு சிங்கத்தாகுறிச்சி பொற்சு அடி புஞ்சை கீள்ப்பொளிக்கி

57 கௌக்கு யிதின்வடக்கு பிடம்பட்டி புதுக்கொளத்து மேல்கலி

58 ங்கிக்கு கௌக்கு யிதின் வடமேற்க்கு திருமலைசமுத்திரம்

59 யெல்லைக்கி கெழக்கு நல்லபெருமாள் புஞ்சை மேல் பொளிக்கி

60 கௌக்கு யிதின்வடக்கு திருமலை சமுத்திரம் யெல்லைக்கி கெழக்

61 கு குமாறமங்கலத்து யெல்லைக்கி தெற்க்கு யிதின் வடகெழக்கு

62 வடபாக்கெல்லை கோவில் புஞ்சை வடக்கி பொழிக்கு தெற்க்கு யி

63 தின் கெழக்கு மேற்படி புஞ்சை இசானியமூலை யிதின் தெற்க்கு பாலைய

64 டி புஞ்சை வடக்கி பொளிக்கு தெற்க்கு யிதின் தென்ங்கெழக்கு

65 குமாறமங்கலத்து யெல்லைக்கி தெற்க்கு முருகன்ங் கட்டுக்க

66 ரை இசானிய மூலைக்கி மேற்க்கு யிந்த னான்ங்கெல்லையும்

67 வீரா அனுமார் முத்திரைக் கல்லுக்குள்பட்ட நஞ்சை புஞ்சை

68 திட்டுத்திடல் நத்தம்படுகை தோப்புத்துறவு மாவடை மரவடை

69 சொற்னாதாயம் வகையறுப்பு யிடங்கை வலங்கை பலசுவந்தி

70 ரம் யிதுமுதலான யெப்பேர்பட்ட வரியுங் கீழ் நோக்கிய கிண

71 றும் மேல் நோக்கிய விருட்சமும் செலதரு பாஷாணம் நிதிநிட்

72 சேபம் சறுவமானியமாக தாராபூறுவமாக தாம்புர சாதனப்ப

73 ட்டையங் வெங்கிடதாசரி பாரிசமாக கொடுத்தபடியினா

74 லே யிந்த தற்மம் சந்திறாதித்தியாளுள்ளவரைக்கும் பில்லும்

75 பூமியும் கல்லும் காவேரியும் உள்ளவரைக்கும் தற்ம்மத்தை ந
76 டப்பிவச்சுக்கொண்டு தற்ம்மத்தை உத்திரோத்திரமாக ந
77 டப்பிவிச்சுக்கொண்டு சுகத்திலேயிருக்க கடவாறாகவும் யிந்த
78 தற்ம்மத்துக்கு வாக்கு சகாயம் சரீர சகாயம் அர்த்தசகாயம்
79 பண்ணின பேற்கள் காசியிலே கெங்கைக் கரையில் கோடி சிவ
80 லிங்க பிரதிஷ்டை பண்ணின பலனை அடைவார்களாகவும்
81 யிந்த தற்ம்மத்துக்கு அகிதம் பண்ணின பேற்கள்
கெங்கைக் கரை
82 யிலே கோடி காராம்பசுவை கொன்ன தோஷத்திலே
83 போவார்களாகவும் யிந்த சாஸனம் யெளுதினது
பளணியப்ப வாத்தி
84 யார் குமாரன் வடமலை வாத்தியார் கையெளுத்து உ.

# 21. பெருவயல் தொண்டைமான் செப்பேடுகள்

எஸ்.எம். கமால், இராமநாதபுரம்

பதினாறாம் நூற்றாண்டில் தஞ்சை நாயக்க மன்னரது நண்பராகவும் பதினேழாம் நூற்றாண்டில் சேதுபதி மன்னருக்கும் பதினெட்டாம் நூற்றாண்டில் தஞ்சை மராட்டிய மன்னருக்கும் கட்டுப்பட்டவராக அறந்தாங்கி அரசு என்ற தொண்டமான்கள் இருந்ததை வரலாறு அறிவிக்கின்றது. இவர்கள் திருவரங்குளம் அரங்குளநாதர் திருக்கோயிலிலும் ஆவுடையார்கோவில் ஆத்மநாதசாமி திருக்கோயிலிலும் திருப்பணிகள் செய்துள்ளனர். இவர்களது அறப்பணிகள் சேது நாட்டிலும் நடந்துள்ளதை அண்மையில் இராமநாதபுரத்தை அடுத்துள்ள பெருவயல் கிராமத்தில் கட்டுரையாளரால் கண்டு பிடிக்கப்பட்ட இரண்டு செப்பேடுகள் தெரிவிக்கின்றன. அறந்தாங்கித் தொண்டமான்களான வணங்காமுடித் தொண்ட மானும் முத்துதொண்டமானும் முறையே சக ஆண்டு 1661, 1662 இல் இரண்டு ஊர்களைத் தானம் வழங்கிய செய்தி இந்த செப்பேடுகளில் குறிப்பிடப்பட்டு உள்ளது.

பெருவயல் கிராமத்தில் சேதுபதிமன்னரது தளகர்த்தர் வயிரவன் சேர்வைக்காரர் நிர்மாணித்த சிவசுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் கைங்கரியங்களுக்காக இந்த ஊர்களைத் தானமளித்துள்ளனர். தானம் வழங்கப்பட்ட ஊர்கள் இன்றைய ஆவுடையார்கோவில் வட்டத்தில் உள்ள சிறுத்தானியேந்தலும் அவத்தானிக்கோட்டையுமாகும். இந்த தானங்கள் "தஞ்சை நகராதிபதி ஸ்ரீமத் மகாராஜா சாகிப் அவர்கள் புண்ணியமாக" (வரிகள் 20-22) எனக்குறிப்பிட்டு இருப்பதால் இந்த தொண்ட மான்களுக்கும் தஞ்சாவூர் மராட்டிய மன்னருக்கும் இடையில் மிக நெருக்கமான அரசியல் உறவு இருந்தது தெரிய வருகிறது.

செப்பேட்டின் தொடக்கத்தில் தொண்டமான்களது விருதாவளிகள் பல கொடுக்கப்பட்டுள்ளன. இவையனைத்தும் விஜயநகர, மதுரை நாயக்க, இராமநாதபுரம் சேதுபதி மன்னர்களது விருதாவளிகளான பொழுதிலும், "ஆதண்ட

மாலையன் கோதண்டராமன்" என்ற விருது மட்டும் இவர்களது பூர்விகத்தைக் குறிப்பிடும் சிறப்புப் பெயராக அமைந்துள்ளன.

*22.1* செப்பேடு *1*

*1* ஸ்வஸ்திஸ்ரீ மகாமண்டல்லேசுரன் ராசதி
*2* ராசன் ராச மார்த்தாண்டன் அரிய ராய தளவிபா
*3* டன் பாசைக்குத் தப்புவா ராயிர கண்டன் கண்டனா
*4* டு கொண்டு கொண்ட நாடு குடாதான் பாண்டி மண்டல
*5* தாபனாசாரியன் சோழமண்டல காவலுடையான்
*6* ஈழமுங் கொங்கும் யாழ்ப்பாணமும் கெச வேட்டை
*7* கொண்டருளிய ராசாதிராசன் ராசபரமேசுரன் ராச
*8* குலசேகரன் ராசகுலதிலகன் சொரி முத்து வன்னியன் கு
*9* டைக்கு கர்ணன் பரிக்கு நகுலன் வில்லுக்கு விசையன் இவு
*10* ளி பாவடி மிதித்தேறுவார் கண்டன் கொட்ட
*11* மடக்கி வையாளி நாராயணன் உரிகோல் சுரதானன்
*12* பகைமன்னர் சிங்கம் பகைமன்னர் கேசரி துட்டநிக்கிர
*13* க சிட்டபரிபாலன் வீர கஞ்சுகன் வீரவளநாடன் சிவபூ
*14* சா துரந்தரன் மன்னரில் மன்ன மறு மன்னியர் காவலன்
*15* வேதியர் காவலன் அரசராவணராமன் அடியார் வேளைக்
*16* காரன் பாரதள விபாடன் சாடிக்கார கண்டன் சூரிய வங்
*17* கிசாதிபன் நாக கன்னிகா வங்கிசோர்பவன் ஆதண்டமா
*18* லையன் கோதண்ட ராமன் மல்லை மயிலை கச்சி ஆரையி
*19* லிருக்கும் அருணாலைத் தொண்டமானாரவர்கள் புத்திரன் வண
*20* ங்காமுடித் தொண்டமானவர்கள் தஞ்சநகராதிபதி மத்
*21* மகாராசா சாயிபு அவர்களுக்குப் புண்ணியமாக மாதிறு வர்
*22* கம் பிதுரு வர்க்கத்துக்கும் புண்ணியமாகவும் சகாத்தம் *1661*
*23* இதின் மேல் செல்லாநின்ற காலயுக்தி வருஷம் தெட்சினாய
*24* த்தில் ஆவனி மாதம் *10* உ கிட்டிணபட்சத்தில் சுக்கிரவாரமும் அமா
*25* வாசையும் கூடின சூரியோபராக புண்ணிய காலத்தில்
*26* பாண்டி மண்டலத்தில் செம்பிநாட்டில் ஆதி சேதுவான நவ
*27* பாஷாணக்கரையில் பெருவயலில் சேது பந்தனம் பன்னு
*30* கயில் ராமசாமி பூசித்த வள்ளி தெய்வனாயகி சகிதார
*31* சிவசுப்பிரமணிய சுவாமிக்கு மகிஷீமத்தநீ பூசித்த

32 பார்வதி பரமேசுவர சுவாமிக்கும் பூசை அபிஷேக நைவேத
33 னம் திருமாலை திருவிளக்கு மாசி திருவிழாக்
கட்டளைக்கும் கவு
34 தம கோத்திரத்தில் திருப்பணிக்காணி மங்களேசுர குருக்கள்
35 கைய்யில் இரணியோகதக பூறுவமாக தானம் பண்ணி
36 குடுத்தது ஒக்கூர் மாகாணத்தில் சித்தகூர் அவத்தினிக்
37 கோட்டை யின்னாங்கெல்கைக்குள்பட்ட நஞ்சைபுஞ்சை மாவி
38 டை மரவிடை திட்டு திடல் நிதி நிட்சேபம் பாசிவரி பநங்கட
39 மை பெட்டிவரி பலவரி முதல் சகல சமுதாய பிராத்தியும் சறுவ
40 மாநிபமாக ஆசந்திரார்க வரைக்கும் ஆண்டு அனுபவி
41 த்துக்கொள்ளக்கடவாராகவும் இந்த தருமத்தை
பரிபாலன
42 ம் பன்னினவன் கோடி சிவலிங்க பிரதிட்டையும் கோடி
43 பிரம பிரதிட்டையும் சேதுவிலும் கெங்கையிலும் பண்ணின
44 புண்ணியத்தை அடைவானாகவும் இந்த தருமத்துக்கு
45 அகுதம் பண்ணினவன் கெங்கையிலும் சேதுவிலும் மா
46 தா பிதாவையும் காராம் பசுவையும் கொன்ற தோஷத்திலே
47 போவானாகவும் சுத்தார்து கிணம் புண்ணியம் பாகே
48 தானு பாலநம். உ.

21.2 செப்பேடு 2

1 ஸ்வஸ்திஸ்ரீ மது மகா மண்டலேசுரன் ராசாதிராசன் ராசமா
2 ர்த்தாண்டன் அரியராய தள விபாடன் பாசைக்கு தப்புவராயிர
3 கண்டன் கண்ட நாடு கொண்டு கொண்ட நாடு குடாதான்
பாண்டி மண்டல தாபனாசா
4 ரியன் சோளமண்டலக் காவலுடையான் இளமும் கொங்குயா
5 ழ்ப்பாணமும் கெசவேட்டை கொண்டருளிய ராசாதிராசன்
ராசாபர
6 மேசுரன் ராசகுலசேகரன் ராசகுலகன் சொரி முத்து வ
7 ன்னியன் குடைக்கு கன்னன் பரிக்கு நகுலன் வில்லுக்கு
விசயன்
8 இவுளி பாவடி மிதித்தேறுவார் கண்டன் கொட்டமடக்கி வை
9 ய்யாளினாராயணன் உரிகோல் சுரதானன் பகைமன்னர்
10 சிங்கம் பகைமன்னர் கேசரி துட்ட நிக்கிரக சிட்டபரிபால
11 ன் வீரகஞ்சகன் வீரவளநாடன் சிவபூசாதுரந்தரன் ம
12 ன்னரில் மன்ன மறுமன்னியர் காவலன் வேதியர் காவல

13 ன் அரசாராவணராமன் அடியார் வேளைக்காரன் பரதளவிபா
14 டன் சாடிக்காரகண்டன் சூரிய வங்கிஷாதிபன் நாககன்
15 னிகா வங்கிசோர்பவன் ஆதண்ட மாலையான் கோதண்ட
16 ராமன் மல்லை மயிலை கச்சி ஆறையிலிருக்கும்
சிதம்பர தொ
17 ண்டமானார் புத்திரன் முத்துதொண்டமானார் அவர்கள் தஞ்ச
18 நகராதிபதி மகாராசா சாயிபு அவர்களுக்கு புண்ணியமாக
19 வும் மாதிரு வர்க்கம் பிதுரு வர்க்கத்துக்கு புண்ணியமாகவும்
சகாத்தம்
20 1662 இதின் மேல் செல்லாநின்ற சித்தார்த்தி உத்தி
21 ரானத்தில் மாசி மாதம் 20 சுக்கிர வாரமும் பெத்த
சிவராத்திரி புண்
22 ய வைத்தில் ஆதி சேதுவில் நவபாஷாணக் கரையில் பெ
23 ருவயலில் சேதுபந்தனம் பண்ணுகையில் ராமசாமி பூசித்த வ
24 ள்ளி தேவனாயகி சகிதாரண சிவசுப்பிரமணிய சுவாமி
பூசை அ
25 பிஷேகம் நைவேதனம் திருமாலை திருவிளக்கு கட்டளைக்கு
ஒக்கூர்
26 மாகாணத்தில் வரிகுடியூர் சிறந்தாணியேந்தலும் வடவாத்தி
பிரா
27 மணர் பாதிநீக்கி மத்திபதியு ஆங்கெல்லைக்குள்ப்பட்ட நஞ்சை
28 புஞ்சை மாவிடை மரவிடை நிதி நிட்சேபம் பாசிவரி பனங்
29 கடமை வெட்டிவரி பலவரி முதல் சகல சமுதாயப் பிராத்தி
30 யும் கௌதம கோத்திரத்தில் திருபணிக்கான மங்க
31 ளேசுர குருக்கள் கய்யில் இரணியோதக பூறுவமா
32 க தாநம் பண்ணிக்குடுத்த படியினாலே ஆசந்திராதித்திய வ
33 ரைக்கும் ஆண்டு அனுபதித்துக் கொள்ளக்கடவாராகவும்
34 இந்த தறுமத்தை பரிபாலனம் பண்ணினவன் கோடி சிவ
35 லிங்கமும் பிரதிட்டையும் கோடி பிரம பிரதிட்டையும் சேதுவி
36 லும் கெங்கை கரையிலும் பண்ணிந புண்ணியத்தை
அடை
37 வானாகவும் இந்த தறுமத்துக்கு அகுதம் பண்ணினவன்
கெங்கையி
38 லும் சேதுவிலும் மாதா பிதாவையும் காராம் பசுவையும்
39 கொன்ற தோஷத்திலே போவானாகவும். சுக்தாலிது தினம்பு
40 ண்ணியம் பரதெத்தானு பாலநம். உ.

# 22. புதுக்கோட்டை வட்டார நிலத்தரசுகள் செப்பேடுகள்

**இரா. இராமமூர்த்தி,** விராலிமலை

புதுக்கோட்டைப் பகுதியில் பல ஊர்களில் மெல்லிய தகடுகளில் எழுதிய செப்பேடுகள் பலவற்றைக் காணமுடிகிறது. இவற்றைப் பெரும் பான்மையும் ஊர் அம்பலகாரர்களும் சிலவற்றைப் பிறரும் வைத்துப் போற்றி வருகின்றனர். இச்செப்பேடுகளுள் ஓர் ஒற்றுமை உண்டு. அதாவது இவை யாவும் ஒரு காலகட்டத்தில் எழுதப் பெற்றவையாகத் தெரிகின்றன. சக ஆண்டு 1400 (கிபி 1478) ஒருபகுதி செப்பேடுகளிலும், சகம் 1430 (1508) வேறு ஒருபகுதி செப்பேடுகளிலும் குறிக்கப்பட்டுள்ளன. மேற்போக்காகப் பார்த்தால் இவ்வாண்டுகள் விசயநகர அரசுக் காலத்தனவாகும். ஆனால் கொடுக்கப்பட்டுள்ள சக ஆண்டுகளும் தமிழ் ஆண்டுகளும் பொருந்தி வரவில்லை. எழுத்தமைதியையும் செய்திகளையும் பார்த்தால் இன்னும் சில நூற்றாண்டுகள் பிந்தியவையோ என்று ஐயப்படவேண்டியுள்ளது. தோராயமாக இவை 17-18 ஆம் நூற்றாண்டுகளைச் சேர்ந்தன எனலாம்.

பெரும்பான்மையான பட்டையங்களில் மன்னர்கள் பெயர்கள் காணப்படவில்லை. அனைத்துப் பட்டயங்களும், விசயநகரப் பேரரசுகளைக் குறிக்கும் மெய்க்கீர்த்தியுடனேயே தொடங்கப்பட்டுள்ளன. அதிலும் நிலத்தரசு, கார்காத்த வேளாளர், வாணாதராயர் என்னும் பட்டத்துக்கு உரியவர்களாகக் குறிப்பிடப்படும் புதுக்கோட்டைப் பகுதியின் வேளாளர்களால் அக்காலத்தில் புகழோடு விளங்கிய சூரிய முத்திரியர்கள் மற்றும் கள்ளம்படைத் தலைவர்களுக்கு வழங்கப்பட்டுள்ளன. மேலும் கிராமப்புறத் தொழிலாளர்களுக்கும் போரில் இறந்து வீரமரணம் அடைந்தவர்களின் வாரிசுகளுக்குமாக வழங்கப்பட்டுள்ள செய்திகளை அறிய முடிகின்றன. சில பட்டயங்கள் கோயிலுக்கு மான்யம் வழங்கியதைத் தெரிவிக்கின்றன. இப்பட்டயங்கள் கரைப்பிரியல் பட்டயம் என அழைக்கப்படுகின்றன. அதாவது

வழங்கப்பட்ட ஊர்களிலுள்ள நிலப்பங்குகள் அல்லது கரைகளில் சிலவற்றின் மீதான உரிமைகளைப் பட்டயம் பெற்றவர்களுக்குக் காணியாட்சியாக வழங்கப்பட்டதைப் பற்றியன இவை.

பின்வரும் ஒன்பது பட்டயங்கள் புதுக்கோட்டை மாவட்டம்
இம்மண் ஆண்டான்பட்டி அம்பலகாரர்
திரு. ப. அருணாசலம் அவர்களிடம் உள்ளவை.

*22.1*

*ஸ்ரீ மகா மண்டலீசுபரன் அசுபதி கெஜபதி நரபதி தெச்சினாதிபதி பிறிதிவுராச்சிய பாரம் பன்னியருளாநின்ற சாலிகவாகன சகாத்தம் 1430க்கு மேல் செல்லாயி நின்றென ருத்திரோத்காரி அற்பிசை மாதம் 5 தேதி விறுதராச பயங்கரன் வெளாநாடாகிய கானாடானதில் ராசலெச்சனீக வளநாடு வல்லநாடு கானியாச்சிக்கு நிலத்தரசு காருகாத்த வேளாளர் வானாதராயர் பட்டம் ஒன்னுக்கு உள்ளிட்டார் சூரியன்முத்திரி எட்டுக்கரை உள்ளிட்டார் நாடு நகரம் நந்தகோபாலன் உள்ளிட்டார்களும்ங் கூடிக் கரை பிறியல் பட்டயம்ங் காணியாச்சிக்கு வந்தவன் ணாராயின பேரசு மக்கள் கள்ளம் படைத்தலைவர் ஆளுவார்கண்டன் உள்ளிட்டார் கரை 2க்கு குடுத்த காணியாச்சி. நஞ்சையில் வடவைநத்தம் ஊரது புரவிலும் பிஞ்சையில் புனையதிரையன் கோட்டை ஊரது புரவிலும் நாலதொரு பங்கு காணியாச்சி மன்னு மனை கோவில் குளம் அம்பலம் உம்பளம் யிடுகாடு படுதுறை சகலமும் ஆளுவது கல்வெட்டு சியமங்கொண்ட சோளியீசுபரர் கோவில் கல்லும் வெட்டி தாம்பூர சாதனம் குடுத்தோம். மேற்படியூர் நாட்டுகணக்கு அறுகாத வட்டகை மூவேந்திரவேளார் தீருப்பு. அருன்ங்குளலிங்கம் அளகில் பெரியவள் துணை உ.*

*22.2*

*ஸ்ரீ மகா மண்டலீசுபரன் அசுபதி கெஜபதி நரபதி தெச்சினாதிபதி பிறிதிவுராச்சியபாரம் பன்னியருளாயி நின்ற சாலிகவாகன சகாத்தம் 1400க்கு மேல் செல்லாயிநின்றென விசைய வருஷம் அற்பிசை மாதம் 9 உ விருதாராசபயங்கர வளாநாடாகிய கானாடானதில் ராசா பனிசூள் வளர்நாடு ஆனதில் வல்லநாடு பள் தொளுலாளியள் கானியாச்சி நாடது பிறவில் நஞ்சை கொன்டதுக்கும் பிஞ்சை கொன்டதுக்கும் நத்தம் குடிகாடுக்கும் வந்தன நம்பியார் கரையில் அக்கச்சி நம்பியார் வகையில் 1. திருமலை நம்பியார் வகை 1 கலசை நம்பியார் வகை 1 ஆக*

வகை 3 மேற்படித் தரனிகாரர் வகை வயித்தினாதன் பட்டர் ஆவுடைக்குட்டிப்பட்டி ஆக வகை 2 தலத்தார் யினம்பன் திருமேனி களியன் பொதியன் ஆக வகை 4 விசுவா கன்னாளன் வகையில் கொல்லன் சோளனாச்சாரி விளக்கன்னாவான் சேதுராயன் தளைவாயன் ஆக வகை 4 தச்சன் வகையில் விளிப்பறயன் அசையாவீரன் மாவிலி தச்சன் ஆக வகை 3 வன்னான் வகை செல்லன் பெரியான் கட்டைக் குளத்தான் நரியாயான் ஆக வகை 4 நாவிதன் வகை மானமுட்டி பெரியாவான் நன் மனகாத்தான் ஆக வகை 2 பள்ளன் வகை முறடன்னான்டி நரியடைக்கன் சங்கன் தூங்கன் ஆக வகை 4 பரையன் வகை மாவிலி பறையன் சோளன் பறையன் சங்காக் காத்தான் பாண்டி சின்னான் ஆக வகை 4 யிந்தப்படிக்கி வல்லநாடு நாடது புரவுக்கும் தேவராயம் விறுமதாயம் சகலமும் நத்தம் குடிக்காடும் யிந்த பள் தொளுலாளியள் அவர் அவர் கானியாச்சி அவரவர் ஆண்டு கொள்ளுவது யிப்படிக்கி கல்வெட்டு கலசை திருமேனி யீசுபரர் கோவில் திருவுடையார் கோவில் சியங்கொண்ட சோளியீசுபரர் தான்தோன்றியீசுபரர் அரன்குளலிங்கம் நாதசுவாமி கோவிலும் குமுசுப்பாரு கெற்ப்பகரம் கல்லும் வெட்டி தாம்பூர சாதனம் குடுத்தோம் யிப்படிக்கி மேற்படியூர் நாட்டு கனக்கு அறுகாத வட்டகை மூவேந்திர வேளாளர் தீருப்பு திருமேனி யீசுபரர் திருவுடையாரும் அரன்குளலிங்கம் அளகில் பெரியவள் துனை உ.

**22.3**

ஸ்ரீ மகா மண்டலிசுபரன் அசுபதி கெஜபதி நரபதி தெச்சினாதிபதி பிறிதிவு றாச்சிய பாரம் பண்ணியருளாய நின்ற சாலீவாகன சகாத்தம் 1430 வருஷம் மேல் செல்லாயி நின்றென ருத்துரோகாரி வருஷம் அற்பிசை 5 விருதரசுப் பயங்கரன் வளா நாடாகிய றாச லெச்சனிக வளா நாடாகிய வல்ல நாடு கானியாச்சிக்கி நிலத்தரசு காருகாத்த வேள்ளர் வானாத ராயர் கரை 1க்கு உள்ளிட்டார் எட்டு வகை யாரும் நாடு நாடு நகரம் நந்த கோபாலனுள்ளிட்டாரும் கூடி கரை பிரியல் பட்டயம் குடுத்ததுகு வந்தவன் நாரானப் பேரசு மக்கள் கள்ளம் படைத்தலைவர் பான்டுரான்னுள்ளிட்டார் கரை 2க்கு குடுத்த கானியாச்சி நஞ்சையில் கிராய நல்லூரு ஊரது புறவுக்கும் பிஞ்சையில் வம்பன்கோட்டை ஊரது புறவுக்கும் ஆக 2 நத்தம் குடிகாட்டில் ஊறது பிரவிலும் நாலத்தொரு பங்கு கானியாச்சி மன்னு மனை கோவில் குளம் அம்பலம் உம்பளம் யிடுகாடு படுதுரை சகலமும் ஆண்டு

கொள்வது யிப்படிக்கு கல்வெட்டு சியம்கொண்ட சோளியீசுபரர் கோவில் கல்லும் வெட்டி தாம்பூர சாதனம் குடுத்தோம் மேற்படியூர் நாட்டு கனக்கு அறுகாத வட்டகை மூவேந்திர வேளார் தீருப்பூ அரன்குளலிங்கம் அளகில் பெரியவள் துனை உ.

22.4

உ ஸ்ரீ மகா மண்டலீசுபரன் அசுபதி கெஜபதி நரபதி தெச்சினாதிபதி பிறதீவுறாச்சிய பாரம் பன்னியருளாய் நின்ற சாலீகவாகன சகாத்தம் 1430 க்கு மேல் செல்லாயி நின்றென ருத்திரோக்காரி வருஷம் அற்ப்பிசை 5 விருதரசர்பயங்கரன் கானாட்டில் றாசலெச்சனீக வளா நாடாகிய வல்லநாடு கானியாச்சிக்கி நிலைத்தரசு காருகாத்த வேளாளர் வானதராயர் பட்டம் 1க்கு நத்தம் 108க்கு உள்ளிட்டார் சூரியன் முத்திரி எட்டுக்கரை உள்ளிட்டார் நந்காம நந்தகேபாலன் னுள்ளிட்டார்களும் கூடிக் கரைப்பிறியில்ப் பட்டயமுங் கானியாச்சி குடுத்த வகையாவது 1க்கு வந்தவன் நாராண பேரசு மக்கள் கள்ளம் படைத்தலைவர் சோளிங்க தேவனுள்ளிட்டார் கரை 2க்கு நஞ்சையில் பிரானமங்கலம் ஊராது புரவிலும் பிஞ்சையில் கொங்கராகுரிச்சி ஊராது பிரிவிலும் நாலத்தொரு பங்கு மன்னு மனை கோவில் குளம் அம்பலம் உம்பளம் யிடுகாடு படுதுறை சகலமும் கல்லு புல்லு பூமி உள்ள வரைக்கு ஆண்டு கொள்ளுவது யிப்படி கல்வெட்டு சியம்கொண்ட சோளியீசுபரர் கோவில் கல்லு வெட்டி தாம்பூர சாதன குடுத்தோம் மேற்படியூர் நாட்டு கனக்கு அறுகாத வட்டகை மூவேந்திர வேளர் தீருப்பு அரன்குளலிங்கம் அலகியப் பெரியவள் துணை உ.

22.5

ஸ்ரீ மகா மண்டலீசுபரன் அசுபதி கெஜபதி நரபதி தெச்சினாதிபதி பிரித்வு றாச்சியபாரம் பன்னியருளாயி நின்ற சாலீக வாகன சகாத்தம் 1430க்கு மேல் செல்லாயி நின்றென ருத்துரோத்காரி வருஷம் அற்ப்பிசை மீ 5 உ விருதரசரபயங்கர வளநாடாகிய கானாடானதில் ராச லெச்சனீக வளாநாடு வள்ளநாடு கானியாச்சிக்கி நிலத்தரசு காருகாத்த வேளாளர் வானாதராயர் பட்டம் ஒன்னுக்கு உள்ளிட்டார் சூரியமுத்திரி உள்ளிட்டார்களும் நகரம் நாடு நந்தகோபாலன் உள்ளிட்டார்களும் கூடி கரைப்பிறியில் பட்டயம்ங் குடுத்த கானியாச்சிக்கி வந்தவன் நாராயனப் பெரசு மக்கள் கள்ளம் படைத்ததலைவர்க்கு மாப்புள்ளை உள்ளிட்டார் கரை 2க்கு குடுத்த கானியாச்சி யாவது நஞ்சையில் களமங்களம் ஊரது புரவும் யினம்பன்

கோட்டை ஊரது புரவில் நாலத்தொரு பங்கு கானியாச்சி மன்னு மனை கோவில் குளம் அம்பலம் உம்பளம் யிடுகாடு படுதுறை சகலமும் நாலத்தொரு பங்கு ஆளுவது யிப்படிக்கி கல்வெட்டு சியமங் கொண்ட சோளியீசுபரர் கோவில் கல்லும் வெட்டி தாம்பூர சாதனம் குடுத்தோம் யிப்படிக்கு மேற்படியூர் நாட்டு கனக அறுகாத வட்டகை மூவேந்திரவேளார் தீருப்பு. அருன்குளலிங்கம் அளகிய பெரிய துனை உ.

*22.6*

ஸ்ரீ மகா மண்டலீசுபரன் அசுபதி கெஜபதி நரபதி தெச்சினாபதிபதி பிறிதீவு றாச்சியபாரம் பன்னியருளாய நின்ற சாலீகவாகன சகாத்தம் **1430** க்கு மேல் செல்லாயி நின்றென ருத்துரோத்காரி வருஷம் அற்பிசை 5 விருதரசர்பயங்கர வளநாடாகிய கானடானதில் ராச லெச்சனீக வளாநாடு ஆகிய வல்லநாடு கானியச்சிக்கி நிலத்தரசு காருகாத்த வேளர் வானாதராயர் உள்ளிட்டார் சூரியமுத்திரி நாடு நகரம் நந்தகோபாலன் உள்ளிட்டார் கரைப்பிறியல் பட்டயம் கானியாச்சி குடுத்துக்கு நாறானப் பேரசு மக்கள் கள்ளம் படைத்தலவ நரசிங்கத் தேவனுள்ளிட்டார் கரை 2க்கு நஞ்சையில் மாவும் நத்தம் ஊராது புரவில் பிஞ்சையில் மேல்மங்கலம் ஊரது பிறவில் நாலத்தொரு பங்கு (மன்னு) மன்னுமனை கோவில் குளம் அம்பலம் உம்பளம் யிடுகாடு படுத்துரை சகலமு நாலத்தொரு பங்கு கல்லு புல்லுப் பூமி உள்ள வரைக்கும் ஆண்டு கொள்ளுவது யிப்படிக்கு கல்வெட்டு சியமங் கொன்ட சோளியீசுபரர் கோவில் கல்லும் வெட்டி தாம்பூர சாதனம் குடுத்தோம் மேற்படியூர் நாட்டு கனக்கு அறுகாத வட்டகை மூவேந்திர வேளார் தீருப்பு அரன்குளவிலிங்கம் அளகில் பெரியவள் துணை உ.

*22.7*

ஸ்ரீ மகா மன்டல்லீசுபரன் அசுபதி கெஜபதி நரபதி தெச்சினாதிபதி பிறிதீவு றாச்சியபாரம் பன்னியருளாயி நின்ற சாலீகவாகன சகாத்த **1430**க்கு மேல் செல்லாயி நின்றென ருத்திரோத்காறி வருஷம் அற்பிசை 5 விருராசர் பயங்கர வளா நாடாகிய கானாடானதில் றாச லெச்சனீக வளா நாடான வல்லநாடு கானியாச்சிக்கி நிலைதரசு காருகாத்த வேளாளர் வானாதாய ருள்ளிட்டாரும் சூரியமுத்திரி எட்டுவகை உள்ளிட்டாரும் நாடு நகரம் நந்தகோபாலன் உள்ளிட்டார்களும் கூடி கரைப் பிறியல்ப் பட்டயம்ங் குடுத்ததுக்கு வந்தவன் நாரானப் பேரசு

மக்கள் கள்ளம் படைத் தலைவர் பாலுக்கு உள்ளிட்ட கரை 2க்கு குடுத்த கானியாச்சியில் சாத்தன்னல்லூரு ஊறது புரவிலும் வல்லாத்தூரன் கோட்டை ஊரது பூரவுலும் ஆக 2 நத்தம் குடுக்காடு ஊறது புறவிலும் நாலத்தொரு பங்கு கானியாச்சி மன்னு மனை கோவில் குளம் அம்பலம் உம்பளம் யிடுகாடு படுதுரை சகலமும் செம்பாதி கானியாச்சி ஆளுவது யிப்பிடிக்கி கல்வெட்டு சியமங் கொன்ட சோளியீசுபரர் கோவில் கல்வெட்டி தாம்பூர சாதனம் குடுத்தோம். மேற்படியூர் நாட்டுக் கனக்கு அறுகாத வட்டகை மூவேந்திர வேளார் தீருப்பு அருங்குளலிங்கம் அளகில் பெரியவள் துனை உ.

22.8

ஸ்ரீ மகா மண்டலீசுபரன் அசுபதி கெஜபதி நரபதி தெச்சிநாதிபதி பிறிதீவு றாச்சியபாரம் பன்னியருளாயி நின்ற சாலிகவாகன சகாத்தம் 1430 க்கு மேல் செல்லாய நின்றென றுத்திறோக்காரி வருஷம் அற்ப்பிசை மீ 5 உ விருதரசரபயங்கர வளா நாடாகிய கானாடானதில் றாச லெச்சனீக வளாநாடு வல்ல நாடு கானியாச்சிக்கி கற்த்தறாகிய காருகாத்த வேளாளர் வானாதராயர் பட்டம் ஒன்னுக்கு உள்ளிட்டார் சூரியமுத்திரி உள்ளிட்டார் எட்டுக்கரைப் பேரும் நாடு நகரம் நந்தகோபாலன் உள்ளிட்டாருங்கூடி கரைப் பிறியில் பட்டயங் குடுத்த கானியாச்சிக்கி வந்தவன் நாறானப் பேரசு மக்கள் கள்ளம் படைத் தலைவர் பளந்திறன்னுள்ளிட்டார் கரை 2க்கு குடுத்த கானியாச்சி நஞ்சையில் அளகிய கூடலூரு ஊறது புரவுக்கும் பிஞ்சையில் கிளாமங் கோட்டை ஊறது புறவுக்கும் ஆக 2 நத்தம் ஊரதுபுரவுக்கும் நாலத்தொரு பங்கு மன்னு மனை கோவில் குளம் அம்பலம் உம்பளம் யிடுகாடு படுதுரை சகலமும் ஆண்டு கொள்ளுவது யிப்பிடிக்கி கல்வெட்டு சியமங் கொன்ட சோளீயீசுபரர் கோவில் கல்லும் வெட்டி தாம்பூர சாதனம் குடுத்தோம் மேற்படியூர் நாட்டுக் கனக்கு அறுகாத வட்டகை மூவேந்திர வேளாளர் தீருப்பு அரன்குளவிலிங்கம் அளகில்ப் பெரியவள் துனை உ.

22.9

ஸ்ரீ மகா மண்டல்லீசுபரன் அசுபதி கெஜபதி நரபதி தெச்சினாதிபதி பிறிதீவுராச்சிய பாரம் பன்னியருளாயி நின்ற சாலீகவாகன சகாத்தம் 1430க்கு மேல் செல்லாயி நின்றென ருத்துரோகாறி வருஷம் அற்ப்பிசை மீ 5உ விறுதரசர் பயங்கரன் கானாட்டில் ராச லெச்சனீக வளா நாடு

ஆன வல்ல நாடு காணியாச்சிக்கி நிலத்தரசு காருகாத்த வேள்ளர் வானாதராயர் கரை ஒன்னுக்கு உள்ளிட்டார் சூரியமுத்திரி எட்டுக்கரை உள்ளிட்டார் நாட்டார் நகரம் நந்தகோபாலன் உள்ளிட்டார் கூடிக் கரைப்பிறியல் பட்டயம்ங் குடுத்த கானியாச்சிக்கி வந்தவன் நாறானப் பேரசு மக்கள் கள்ளம் படைத்தலைவர் அஞ்சாப்புலிக்கரை 2க்கு நஞ்சையில் கலசை நெய் வாசலம் ஊரது புறவில் பிஞ்சையில் ளெமங்கலம் ஊரது புரவில் ஆக 2 நத்தம் ஊரது புரவில் நாலத்தொரு பங்கு கானியாச்சி மன்னு மனை கோவில் குளம் அம்பலம் உம்பளம் யிடுகாடு படுதுரை சகலமு 4த் தொரு பங்கு கானியாச்சி ஆளுவது யிப்பிடிக்கி கல்வெட்டு சியகொண்ட சோளியீசுபரர் கோவில் கல்லும் வெட்டி தாம்பூர சாதனம் குடுத்தோம் மேற்படியூர் நாட்டு கனக்கு அறுகாத வட்டகை மூவேந்திர வேளார் தீருப்பு அருங்குளலிங்கம் அளகில் பெரியவள் துனை உ .

## 22.10 திருமயம் வட்டம் பனையபட்டி திரு நா. முத்தையா அவர்களிடமுள்ள செப்பேடு

ஸ்ரீ மகா மண்டலீசுபரன் அரிய தள வியபாடன் பாசசைக்கித் தப்பு மூவராய கண்டன் கன்டநாடு கொண்டு குடாதான் பாண்டி மண்டலத்தார் பஞ்சாளனாசாரியார் சோழ மண்டலப் பிறதாபன் தொன்டமன்டலப் பிறதாபனார்சாறி றாசள றாச மாத்தான்டன் மல்லிகச்சிறாயர் மகாறாயர் அசுபசசு கெஜபதி நரபதி தெச்சினாதிபதி பிறிதீவு றாச்சியாபாரம் பன்னியருளாயி நின்ற சாலிகவாகனச் சகாத்தம் 1400க்கு மேல் செல்லாயி நின்றெனெ நந்தன வருஷம் வயாசி மீ 5உ. சியசோல கெம்பீர வளா நாடாகிய கோனாடு பிறாமலை சூள்ந்த பொன்னமராபதி னாடு.....வடபத்தில் கூடல்லூரு ஆகிய பனையூர் குலமங்கலம் ஊர் சமைய்ந்த ஊரவர் அனைவருமுள்ளிட்டாருங் கூடி கரைப்பிறியில் வகையாவது பட்டயம் வாள்க் கோட்டைறாயன் சேது காவல் புரயைர் மற மன்னர் மனாவிளயப்புரையர் சோலிங்கதேவர் தளை மதிச்சான னுள்ளிட்டாற்க்கும் அசையாத கட்டை மதியா வீரன் னுள்ளிட்டாற்க்கும் கரை ஊறது பிறிவில் ஒன்றுபதுலெ ஒரு கரைக்கி வகைப்பிறியில் நஞ்சையில் பனையக யிமாய வயல் நஞ்சை களைபட்டதும், குலமங்கலம் வயல் கன்டதும் நஞ்சையும் கூதாடன் முத்திரி கம்மாய் நஞ்சை கன்டதும் ஆக வகை 3 மு ஒன்பதுக்கு ஒரு கரை நஞ்சையும் பனிக்கன் னேந்தல் நஞ்சை கன்டதும் 2 சலன் னேந்தல் நஞ்சை கன்டதும் ஒக மானனேந்தல் நஞ்சை கன்டதும் ஆக

வகை 2 வகை 6க்கு நத்தம் குடிக்காடு 2க்கு பிஞ்சை யளந்து கன்டதும், விரையடி துகை 540 மு ஒரு பங்கு 600[?] விரையடி பிஞ்சையும் பனையூரில் மனைக் கானியாச்சி அம்பலம் நடுவீதிக்கி மேற்கு ரென்டாம் வீதி 100 அடி அகலம் தெக்கு வடக்கு கிளக்கு மேற்கு கோட்டைக்கரை கண்டமட்டுக்கும் நிற்பது குளமங்கலமும் யிந்தப்படிக்கி நிற்பது யிப்பிடிக்கி மேற்படியூர் நாட்டுக் கனக்கு அறுகாத வட்டகை மூவேந்திர வேளார் தீருப்பூ அளகிய நாயகி ஒலியவள் துனை.



# 23. கண்டி அரசர் தரங்கம்பாடி டேனிஷ் ஆளுநருக்கு எழுதிய கடிதம்

அ. இராசேந்திரன், தரங்கம்பாடி

டென்மார்க் நாட்டின் தலைநகரான கோபன்ஏகனில் உள்ள ராயல் ஆவணக் காப்பகத்தில் அந்நாட்டுத் தொடர்பான தமிழ் ஆவணங்கள் பல பாதுகாக்கப்பட்டு வருகின்றன. அவற்றுள் சில சுவையானவையாக உள்ளன.

கி.பி. 1758இல் டேனிஷ் ஆளுநர் ஜியார்ஜ் குரோக் அவர்களுக்கு மராட்டிய மன்னர் பிரதாபசிம்மன் எழுதிய கடிதம் குறிப்பிடத்தக்கது. வலங்கை சாதியாருக்கும், அரசுக்கும் ஏற்பட்ட ஒப்பந்தம் பற்றிக் கூறுகிறது. தில்லையாடியில் உடையார் பாளையம் ஜமீன்தாரின் சொத்துக்கள் கொள்ளை அடிக்கப்பட்டபோது, அவற்றைக் கண்டுபிடித்தவர்கள் உடனே தரங்கம்பாடி கவர்னருக்கு தெரிவிக்க வேண்டும் என்ற ஆளுநரின் ஆணையும் தமிழில் எழுதப்பட்டுள்ளது.

கீழே வெளியிடப்பட்டுள்ள கடித நகல் மேற்படி ராயல் ஆவணக் காப்பகத்தாரிடம் பெறப்பட்டு இப்போது தரங்கம் பாடி அருங்காட்சியகத்தில் பாதுகாக்கப்பட்டு வருகிறது. இலங்கையில் உள்ள கண்டியில் தனி அரசு ஏற்படுத்தி நாடாண்ட மதுரை நாயக்க மன்னர்களின் வழித்தோன்றல்கள் கி.பி. 1700 முதல் 1832 வரை கண்டியில் ஆட்சி செய்துள்ளார்கள். இவர்களுள் முதல் அரசரான வீரபராக்கிரம நரேந்திர சிங்க மகாராஜா (1700-1738) என்பவர் தரங்கம்பாடி ஆளுநர் முசல்யிட்டன் (Muheler Fort) என்பவருக்கு எழுதிய கடிதம் இது.

இக் கடிதத்தில் இதற்குமுன் ஆர்க்காடு நவாப் செய்த பண உதவிகளும், கப்பித்தான் உள்படியில் செய்த உதவிகளை நினைவு கூர்ந்து, நவாபிடம் வாங்கிய கடன் காலாவதி ஆவதால் உடன் வட்டியுடன் திருப்பிச் செலுத்தவேண்டியதிருப்பதால் கடனாக ஐயாயிரம் வராகனும், இரண்டாயிரம் துப்பாக்கியும் கொடுத்து உதவும்படிக் கேட்டுள்ளார். இலங்கையில் ஆளும் டச்சுக்காரர்களும், சிங்கள அரசரும், நவாபுக்கு கொடுத்த

பரிந்துரைக் கடிதத்தைப் பற்றியும் நினைவுறுத்திக் கடன் கோரியுள்ளார். இதற்கு ஈடாகக் கண்டியில் ஒரு துறைமுகம் அமைத்துக் கொள்ள இடம் தருவதோடு கொடுக்கும் தொகைக்கு வட்டியும் சேர்த்துத் தருகிறோம் என்று உறுதி அளித்துள்ளார்.

இக் கடிதத்தில் குறிப்பிடப்படும் நவாப் தாவுத்கானாக இருத்தல் கூடும். இவர் 1703-1710இல் ஆர்க்காட்டில் இருந்து ஆட்சி செய்தவர். ஆங்கிலேயர்களுக்குப் பல சலுகைகள் செய்தவர். இவர் பல நாடுகளுக்குச் சென்று வந்ததும், கடல் பயணத்தில் ஆர்வமிக்கவர் என்பதும் இவரது வரலாறு கூறும்.

### தேவி சகாயம்

*ராசமானிய ராச ஆனந்த வீரபராக்கிறம நரேந்திர*
*சிங்க மகராசா ஆண்டவர் குமார*
*சாமி மகராசா அவர்கள் தலங்கம்பாடி துரை*
*அவர்களுக்கு அறிய எழுதுங் காரியமாவது*
*முன்னாலே எழுதி அனுப்பிவிச்ச கடுதாசி*
*னாம் அங்கே வந்தால் தாங்கள் ஒத்தாசை ஒ*
*தவி பண்ணுகுற மெண்ணது சரியே யிப்பவு*
*மானுவ[1] எங்கள் கவை காரிய முடிஞ்சு வரு*
*குது கப்பிதான்[2] உள்படிலும் நபாயும் நம்*
*முட காரியங்களுக்கு தயவு வச்சு அனுப்*
*பி விக்கிறாகள் நபாபு உடைய ஒட்டியும் ஆ*
*ச்சுது சீக்கிறத்துக்கு கூட்டி அனுப்பிவிக்கி*
*றோமென்று சொல்லி பநணத்துக்கு ஏது*
*வாகுது. யிந்த காரியங்களுக்கு எல்லா*
*ம் முசல்யிட்டன்[3] கொஞ்சம் பணங்காசு*

---

1. மானுவ மான்ய
2. கப்பிதான் கேப்டன் என்ற சொல் கற்பித்தான், கப்பித்தான், கப்பிதான், எனப் பலவாக வழங்கப்படுகிறது.
3. டேனிஷ் ஆளுநர்

16 குடுத்து ஒத்தாசை ஒதவி பண்ணினால்

17 யின்னம் கொஞ்சம் பணங்காசு தே

18 வையிருகுது ஆனபடியால் தாங்களு

19 ங் கொஞ்சம் பணங்காசு ஒத்தாசை

20 பண்ணி ரெண்டாயிரம் துப்பாக்கியும் கு

21 டுத்து ஒத்தாசை ஒதவி பண்ணவேண்டி 22 யது னாங்கள் அங்கே வந்த உடனே

23 ரெண்டாயிரந் துப்பாக்கி குடுக்கவும் யிப்படி

24 க்கி நடக்கவேண்டிய காரியத்துக்கு நிக்கல் அச

25 றுசன் மரைக்காயரும்[4] மஞ்சறுகான்

26 னொமயிதார்[5] அவர்களையும் அனுப்பிவி

27 ச்சோம் சகலமான சேதியும் சேதிரல்

பக்கம் 2

28 லத் தெரியவரும் யிவடத்தில் ஒத்தாசை ஒ

29 தவி பண்ணுகிற படியினாலே தாங்களும் எ

30 ங்களுக்கு ஒத்தாசை ஒதவி பண்ண வேண்டி

31 யது சிலவுக்கு அய்யாயிரம் விராகன் ஒத

32 வி பண்ணிணாகால் னாங்கள் வந்து சேருகு

33 றோம். சிங்களத் திசைமார் தானவதிமார்க

34 ளும் உலாந்தகாறனைத்[6] தொட்டு லிவிகாதம்

35 யாதொரு காரியங்களுக்கு சிந்தை ஒ

36 தவிகள் என்று கவில் எழுதி அனுப்பிவி

37 ச்சார்கள். அந்த கவிலை நபாபும் கப்பித்தான்

38 உள்படிலும் வாங்கி பார்த்துக் கொண்டு

39 நமக்கு நடப்பிக்க வேண்டிய காரியங்கள் எ

40 ல்லாம் குடுத்து அனுப்பி உலாந்தகாற

41 ருக்கு கடுதாசியும் குடுக்குறார்கள் குடுத்து

42 அனுப்பிவிக்கிரார்கள். நமக்கு கொஞ்சமானு

43 ங் காசும் கொஞ்ச தோக்கும்[7] குடுத்து அனு

44 ப்பிவிச்சால் தங்களுக்கு நம்முட தேசம்
45 கண்டி தேசத்திலே ஒரு துறைமுகங் குடு
46 குறோம் தங்களுடைய பணத்துக்கு வட்டி
47 யும் பணமும் ஒப்பிச்சு கொடுக்குறோம்
48 நம்முட காரியகாறரை அனுப்பிவச்சோம்
49 அவர்களை சேதி கேட்டால் எல்லா சேதியு
50 ம் தெரியவரும். அவர்கள் வந்தமனு
51 தரை சங்கையுடனே நடப்பிச்சுக் கொள்
52 ளவும் வேண்டியது.

---

4. நிக்கல் அசறுசன் மரைக்காயர் (Nikkel Hasursen)
5. நொமயிதார் நியமதானி ; கண்டி அரசரின் பிரிதிநிதிகளாகக் கடிதம் கொண்டு வந்தவர்.
6. உலாந்தகாரன் ஹாலந்து நாட்டுக்காரன் அல்லது டச்சுக்காரன்.
7. தோக்கு துப்பாக்கி.

# 24. பிள்ளை உடன்படிக்கைச் சீட்டு

ம.சா. அறிவுடைநம்பி, தஞ்சாவூர்

*தமக்குக் குழந்தைகள் இல்லையெனில் எந்தவொரு குழந்தையையாவது தத்து எடுத்துக்கொள்வது தொன்றுதொட்டு இருந்துவரும் பழக்கமாகும். 5.8.1851 (செவ்வாய்க்கிழமை) அன்று மயிலாடுதுறையைச் சார்ந்த துங்கானந்த வாத்தியார் என்பவர் தமக்குக் குழந்தை இல்லாததால் அதே ஊரைச் சார்ந்த கறுப்பாயி என்பவளின் ஒருவயது நிரம்பிய ஆண் குழந்தையை தத்தெடுத்துக்கொண்டார். இதில் வேடிக்கை என்னவென்றால் ஒரு சேலையும் 1 3/4 ரூபாயையும் பெற்றுக்கொண்டு தாய் தன் குழந்தையைத் தத்துக்கொடுத்துள்ளார். இதைப்பார்க்கும்போது குழந்தையை ஏழ்மை காரணமாக விற்றுவிட்டதாகவே கருதமுடிகிறது. 'பிள்ளை உடன்படிக்கைச் சீட்டு' என்று இவ் ஆவணம் கூறப்படுகிறது.*

*இவ் அரிய காகிதக் கையெழுத்துப் படி தஞ்சாவூர், மகர் நோன்புச் சாவடியில் உள்ள கிறிஸ்தவப் பெரும்புலவர் வேதநாயக சாத்திரியார் பரம்பரையினரிடம் உள்ளது.*

> *துங்கானந்த வாத்திக்கு மாயூரங் கறுப்பாயி தன் பிள்ளையைப் பற்றி எழுதிக் கொடுத்த உடன்படிக்கைச் சீட்டு*
>
> ***1851**க்கு சரியான விரோதிகிருது வருடம் ஆடி **22** தேதி மாயபுரத்தைச் சேர்ந்த கொறனாட்டுப் பாதிரியார் பங்களாவிலிருக்கும் துங்கானந்த வாத்தியாருக்கு மேற்படி யூரிலிருக்கும் கறுப்பாயி என்னுதான பிள்ளையை மேற்படி துங்கானந்த வாத்தியாருக்கும் அவர் பெண்சாதி ஞானம் மாளுக்கும் பிள்ளையில்லாத படியால் என்னுதான ஒருவயதுள்ள ஆண்பிள்ளையைத் தத்து புத்திரனாக விட்டுக் கொடுத்தபடி யென்னவென்றால் என்னுதான பிள்ளையை என்னுடை இன சம்மதியின்பேரில் தங்களுக்கும் தங்கள் பெண்சாதி ஞானம் மாளுக்கும் நான் பிள்ளையாகக் கொடுத்துவிட்ட படியினாலே மேற்படி பிள்ளையை **4**ஆம் தேதி முதல் தாமே வளர்த்துக் கொண்டு தம்முடைய வீட்டுக்கு சுதந்திர பிள்ளையாக வைத்துக்*

கொள்ளுகிறது. நான் எளியவளானபடியால் தாங்கள் சந்தோஷப்பட்டு எனக்கு ஒரு சேலையும் 13/4 ரூபாயும் கொடுத்தபடியால் இனியொரு காலங்களில் நான் என்னுதான பிள்ளையைப்பற்றி யாதொரு பேச்சுப் பேசிக் கொண்டு வந்தால் தங்களுதான பணத்தையும் சேலையும் கொடுத்துவிட இந்த என்னுதான பிள்ளைக்குச் செலவழித்திருக்கிற சக எப்பேச்சும் பேசாமல் கொடுத்து விடுவேனாகவும். இந்தப்படி என் மனோராசியில் யெழுதிக் கொடுத்தேன் கறுப்பாயி.

இந்த கிறல் கறுப்பாயி ஆசீர்வாத உபாத்தியார் அறிவேன்
குருபாதம் பிள்ளை அறிவேன்
ஐயாத்துறை பிள்ளை அறிவேன்
சான் பிள்ளை அறிவேன்
அடைக்கல உபாத்தியார் அறிவேன்
முத்துசாமி அறிவேன்.

## 25. அண்டிமெண்டு உண்டியல் ஆவணங்கள்

**வள்ளி சொக்கலிங்கம், காரைக்குடி**

*கி.பி.1887, 1894, 1919* ஆகிய ஆண்டுகளில் பயன்படுத்தப் பட்ட ஐந்து வங்கி ஆவணங்கள் கீழே தரப்பட்டுள்ளன. இவை அண்டிமெண்டு (On demand) உண்டியல் என்று வழங்கப் பட்டவை. தனிநபர் வங்கிகளால் வழங்கப்பட்டவை. ஒன்று கோயில் தொடர்புடையது.

புதுக்கோட்டை, தேவகோட்டை, காரைக்குடிப் பகுதிகளில் வாழும் நாட்டுக்கோட்டைச் செட்டியார் எனப்படும் நகரத்தார் சென்ற நூற்றாண்டுகளில் பர்மா, மலேயா, இலங்கை போன்ற நாடுகளில் தனவணிகர்களாக விளங்கினார்கள். ஈட்டிய பொருளில் பல இடங்களில் கோயில் திருப்பணிகளையும் மேற்கொண்டார்கள். இன்றையத் தமிழக வங்கிகளின் தோற்றம் மற்றும் வளர்ச்சிக்கு இவர்களே காரணமானவர்கள்.

இவர்கள் கடல்கடந்த நாடுகளில் நாணயப் பரிமாற்றங்களுக்குச் சில நடைமுறைகளைப் பின்பற்றினார்கள். அந் நடைமுறைகள் இன்றைய வங்கிகளில் காசோலை (Cheque), வரைவோலை (Draft), வைப்புத் தொகை (Deposit) ஆகியவற்றை ஒத்துள்ளன. நடப்பு வட்டி (நாள்வட்டி), தவணை வட்டி (மாதக் கூட்டுவட்டி) என்ற முறைகளில் வட்டியைக் கணக்கிட்டும் உள்ளனர்.

பர்மாவில் ரெங்கோன், மேல்மோர்ன் ஆகிய இடங்களுக்கும் இந்தியாவில் தமிழகம், வங்காளம் ஆகிய இடங்ளுக்குமிடையே வழங்கிய இவ் ஆவணங்கள் தமிழிலேயே அச்சிடப்பட்டுள்ளன. தேவைக்கு ஆங்கிலச் சொற்களும் அச்சிடப்பட்டுள்ளன. ஆங்கிலத்தில் அச்சிடப்பட்டிருந்தாலும் அதில் தமிழிலேயே சொற்கள் பூர்த்தி செய்யப்பட்டுள்ளன. தமிழர் தமிழிலும், வங்காளியர் வங்காளத்திலும், பர்மியர் அவரது மொழியிலும் கையொப்பமிட்டுள்ளனர். ஒன்றில்

பாண்டியன் பிரஸ், மதுரை என்று அச்சகத்தின் பெயரும் உள்ளது.

(இவ்வாவணங்களில் பலவற்றில் தமிழில் கையால் எழுதும்போது மெய்யெழுத்துகளுக்குப் புள்ளியிடவில்லை யென்பது குறிப்பிடத்தக்கது. ஆனால் அச்சில் புள்ளியிடப் பட்டுள்ளன.)

பணம் கொடுக்கும்போதும் தீரும்போதும் ஆங்கிலேய அரசின் ஒரு அணா முத்திரை ஒட்டியுள்ளனர். பணம் கொடுத்துத் தீர்வதைக் குறிப்பிட 'செல்' எழுதிக் கொடுத்தல் என்ற வாசகமும் காணப்படுகிறது. இரப்பர் முத்திரையால் 'பணம் கொடுத்தது' என்று குறுக்கே பதித்துள்ளனர் . 'தீர்ந்தது' என்றும் எழுதியுள்ளனர். தமிழ் எண்களும் அரேபிய எண்களும் பயன்படுத்தப்பட்டுள்ளன. கருப்பு மையினாலேயே எழுதியுள்ளனர்.

25.1 உண்டியல் 1

உ சிவமயம்

Rs.*150* அ.க.அ.ள A.K.A.L. No.*54*/ ருயச

சதஅஅள சூலாகி மீ யச உ ரெங்கோனில் வ.குலாம் நசீப்பு வரவு அ.க.அ.ள. கடை பற்று ரூபாய் (ஸருய) யிந்த ரூபா னூத்தி அன்ம்பதும் மருணாரில் யிந்த உண்டியல் கொண்டு வருகிற பேறகள் வசம் வங்காளத்தில் அ.க.அ. வீறப்ப செட்டியார் பணங்கொடுத்து இந்த உண்டியலில் செல்லெழுதி தறச்சொல்லி வாங்கி கட்டிக் கொள்ள வேண்டியது.

சற்வசித்து — இப்படிக்கி
ஆடி மீ — அ.க.அ.ள. கூட்டாளி
ரு உ — அருணாசலம் செட்டி

(குறிப்பு: ரெங்கோன் அ.க.அ.ள. என்று தமிழிலும் ஆங்கிலத்திலும் உள்ள முட்டை வடிவ இரப்பர் முத்திரை குத்தப்பட்டுள்ளது. மருணர் என்பது (Mariner) கப்பலின் பெயராக இருக்கலாம். குறுக்கே தீர்ந்தது என எழுதப் பட்டுள்ளது. பின்புறம் ஆங்கிலேய இந்திய அரசின் ஒரு அணா

முத்திரை ஒட்டப்பட்டுப் பெற்றவர் கையொப்பம் இட்டுள்ளார். மேலும் மூன்று கையொப்பங்களும் பின்புறமுள்ளன.)



25.2 உண்டியல் 2

*மா.அ.பெ.ரி* — *அ.க.அ.மெ*

*மாற்றூர்* — *இரங்கூன்*

No. *68* — Rs *200*

*விஜய வருஷம் சித்திரை மீ ௬ ௨ காறக்குடி ராய. ராம. வரவு மாற்றூர் ஐன்னூற்றீஸ்வரர் பெரியநாயகியம்மன் பற்று ரூ உள இந்த ரூபாய் இருநூறுக்கும் நாளது . மீ நாளது ௨ முதல் இரங்கூன் நடப்பு வட்டியுடனிவ் வுண்டியல் கொண்டு வருகிறவற்கள் வசமவ்வூரில் அ.க.அ.மெ. கூட்டாளி முருகப்ப*

செட்டி பணங்கொடுத்திதிற் செல்லுடன் பெற்றுக்கொண்டு மா.அ.பெ.ரி. கணக்கிற் பத்தெழுதிக் கொள்ளவும்.

இந்தப்படி இராமநாதன் செட்டி



(குறிப்பு: தலைப்பில் வாகுமாலை அணிவிக்கப்பட்ட சிவலிங்கத்தின் படம் அச்சாகியுள்ளது. மாற்றூர் மா.அ.பெரி என்று தமிழிலும் ஆங்கிலத்திலும் இரப்பர் முத்திரை உள்ளது. 'நாளது' என்ற சொல் குறியீடுகளின் மூலம் காட்டப்பட்டுள்ளது. இராமநாதன் செட்டி என்ற கையொப்பம் 1 அணா முத்திரை ஸ்டாம்ப் மீது இடப்பட்டுள்ளது. மதுரை பாண்டியன் பிரஸ் என்று பக்கவாட்டில் அச்சாகியுள்ளது. அ.க.அ.மெ. என்பது அ.க.ரா.அரு என்பதை அடித்து அதன்மேல் எழுதப்பட்டுள்ளது. கோயில் பணத்தை முதலில் ஒருவரும் பிறகு மற்றொருவரும் இரங்கூனில் நிர்வகித்துள்ளனர் என்பதை இது காட்டுகிறது.)

உ சிவமயம்

Rangoon இரங்கோன்

Rs *700/* அ.க.அ.மெ. A.K.A.M.No. Calcutta

No. உயரு

சதஅளசயச சுலாய் மீ உயரு உ அண்டிமெண்டு முனு சம்பிரநுபகுசு ஆட்ருக்கு கொண்டு வந்தார். கேட்கும்போது ரூபாய் (எ௱) யிந்த யெளனூரும் மட்டும் வங்காளத்தில் அ.க.அ. சிதம்பரம் செட்டியார் கொடுக்க வேண்டியது.

செய அ.க.அ.மெ. ஏஜெண்டு

ஆடி மீ முருகப்ப செட்டி

சு உ



Rangoon உ சிவமயம்

இரங்கோன்

Rs. 700/ A. K. A. M. No.

அண்டிமெண்டு

கேட்கும்போது ரூபாய் ஆட்ருக்கு

யிந்த ரூபாய்

ம் வங்காளத்தில்

அ. க. அ. சிதம்பரம் செட்டியார். கொடுக்கவேண்டியது.

அ. க. அ. மெ. ஏஜெண்டு

*(குறிப்பு: பின்புறம் 1 அணா முத்திரை ஸ்டாம்பு ஒட்டப்பட்டு அதன்மீது அ.க.அ.மெ. ரங்கூன் என்ற இரப்பர் முத்திரை இடப்பட்டுள்ளது. வங்காளம் அல்லது பர்மிய எழுத்தில் இரண்டு கையொப்பங்கள் உள்ளன. 'செய ஆடி மீ யரு உ செக்கு உசநபி வசம் ரூ ளஎம் கொடுத்தது .........' என்றுள்ளது. ஆடி மாதம் 6 ஆம் தேதி வழங்கி 15 ஆம் தேதி (9 நாட்களில்) இந்த அண்டிமெண்டு தீர்ந்துள்ளது.)*

25.4 அண்டிமெண்டு 2

**உ சிவமயம்**

மோல்மேன் Moulmein

Rs *350/* *ச.தே.மெ.* S.T.M. No *80*

ON DEMAND *94* நவம்பர் மீ 12 உ அண்டிமெண்டு செய அப்பிய் மீ உயச உ அ.சு.செ. கடை ஆடருக்கு அல்லது கொண்டு வந்தாற் வசம் கேட்கும்போது ரூபாய் ஙளருய யிந்த ரூபாய் முன்னூத்தி அன்பது மட்டும் கொடுக்கிறது.

அ.க.அ.மெ.
குளந்தையன் செட்டி
ரெங்கோன்

*ச.தெ.மெ. லெக்ஷுமணன் செட்டி*

*(குறிப்பு: பக்கவாட்டில் நடுவில் ' பணம் குடுத்தாச்சுது' என்று எழுதப்பட்டுள்ளது. பின்புறம் 1 அணா ஆங்கிலேய அரசு முத்திரை ஸ்டாம்பு ஒட்டப்பட்டுள்ளது. அதன்கீழ்* 'Pay to the Order of Kaseem Ibrahim Mahtar not other' *என்று எழுதி வங்காள எழுத்தில் கையொப்பமுள்ளது. அதன்கீழ் 'யிதில் கண்ட ரூபாய் பெத்துக்கொண்டோம் அ.சு.செ. ஆடற் ராமனாதன்' என்று எழுதப்பட்டுள்ளது.)*

No. *75*

உ

*சிவமயம்*

*மீனாக்ஷி சுந்தரேஸ்பராள் துணை*

Rangoon *28101919*

வெ.வெ.கரு

V.V.KR. FIRM

No. *4* MOGUL STREET

Pay to *தனக்கு* or Bearer Rupees *அய்நூரு மட்டும்* and debit same to my account.

Rs *500/* *சா.சி.சு. ராமு*

*(குறிப்பு: இடது பக்கத்தில் 'V.V.KR. FIRM Rangoon' என்று அணிவேலைப்பாடுகளுடன் அச்சிடப்பட்டுள்ளது. அதனருகில் 'A B M Press 2251 24 3 19 50' என்று அச்சிடப்பட்டுள்ளது. குறுக்கே 'பணம் கொடுத்தது' என்று முத்திரை உள்ளது. பின்புறம் முகம்மது சுல்த்தான் என்று கையொப்பமுள்ளது.)*

# 26. ஆவணக் காப்பகத்தில் இரகசியப்பிரிவு தேவையா?

நா. ராஜேந்திரன், திருச்சிராப்பள்ளி

இக்கால வரலாற்றின் முதுகெலும்பாக விளங்கும் ஆவணக் காப்பகங்கள் எவ்வாறு செயல்படுகின்றன என்பதை ஒவ்வோர் ஆய்வாளரும் அறிந்திருக்கவேண்டும். தென்னிந்திய அரசியல், சமூக பொருளாதார வரலாற்றை எழுத சென்னை எழும்பூரில் உள்ள தமிழ்நாட்டு வரலாற்று ஆய்வு மற்றும் ஆவணக் காப்பகம் மிகவும் இன்றியமையாதது. இவ் வாவணக் காப்பகம் ஆசியாவில் உள்ள மிகப் பெரிய ஆவணக் காப்பகங்களுள் ஒன்றாகும்.

இவ் வாவணக் காப்பகம் தன்னிடத்தே ஆங்கிலம், பிரெஞ்சு, டச்சு போன்ற ஐரோப்பிய மொழிகளிலும், தமிழ், மராட்டி மற்றும் பாரசீகம் போன்ற இந்திய மொழிகளிலும், எழுதப்பட்டுள்ள ஆவணங்களைக் கொண்டுள்ளது. ஆய்வுக்காக இந்த ஆவணக் காப்பகத்தில் நுழையும் ஆய்வாளர்கள், இந்த ஆவணக் காப்பகம் செயல்படும் முறை மற்றும் ஆவணங்கள் பிரித்து வைக்கப்பட்டிருக்கும் முறை போன்றவற்றை தெளிவாகத் தெரிந்து வைத்திருந்தால் மிக எளிதாகத் தங்களுக்கு வேண்டிய ஆவணங்களைப் பெற முடியும்.

இவ் வாவணக் காப்பகத்தில் உள்ள நடைமுறைகள் ஆங்கிலேயர் ஏற்படுத்தியனவாகும். ஆங்கிலேயர் தங்கள் அரசை எதிர்க்கக் கூடிய அல்லது பாதிக்கக் கூடிய ஆவணங்களை "இரகசியப் பிரிவு" (Confidential Section R-I) ஒன்றில் வைத்துப் பேணினர். இப்பிரிவில் வைக்கப்பட்டுள்ள ஆவணங்கள் இன்றும் அவ்வாறே அழைக்கப்படுகின்றன. ஆனால் இப்பிரிவு செயல்படும் முறையோ இப்பிரிவில் வைக்கப்பட்டுள்ள ஆவணங்கள் எவை என்னும் செய்தியோ ஆராய்ச்சியாளர் களின் கவனத்திற்கு இன்னும் வராமல் உள்ளது. இதற்கு முக்கிய காரணம் 'இரகசியப் பிரிவில்' உள்ள ஆவணங்களுக்கு பொருள்

பட்டியல் (Index) இல்லாதது. இதனால் பல முக்கிய ஆவணங்கள் ஆராய்ச்சியாளர்களின் கண்ணில் பட வாய்ப்பில்லாமல் உள்ளன.

இந்நிலையில் பல ஆராய்ச்சியாளர்களைப் போலவே நானும் ஆவணக் காப்பகத்துக்குள் ஆய்வைத் துவக்கினேன். எனது ஆய்வுத் தலைப்பு "தமிழகத்தில் சுதேசி இயக்கம் 1905-1914" என்பதாகும். இக்கால கட்டத்தில்தான் தமிழகத்தில் முதன் முறையாக தமிழ் மொழியைக் கொண்டு தமிழக மக்களைத் தட்டி எழுப்பினார்கள் சுப்பிரமணிய பாரதி, சுப்பிரமணிய சிவா, வ.உ. சிதம்பரம்பிள்ளை போன்றவர்கள்.

அக்காலச் செய்தித்தாள்கள் பல சுதேசிய இயக்கத்தின் உச்சக் கட்டங்களைப் படம் பிடித்துக் காட்டிய போதும், ஆவணக் காப்பகத்தில் இதை உறுதிப்படுத்தும் எவ்விதத் தடயமும் அகப்படவில்லை.

அகப்பட்ட பல தடயங்கள் இதற்கு எதிர்மாறான சாட்சியங்களை அளித்தன. இத்தருணத்தில் ஆவணக்காப்பகத்தில் உள்ள நூலகத்தில் டாக்டர் மு. ரங்கையா அவர்கள் தயாரித்த தேசிய இயக்கத்தின் ஆவணங்கள் தொகுப்பு கிடைத்ததின் விளைவாக தமிழ்நாட்டு ஆவணக் காப்பகத்துக்குள் இருக்கும் ஆவணங்கள் சிலவற்றை அறியமுடிந்தது. இதைத் தொடர்ந்து மேற்கொண்ட முயற்சிகளின் விளைவாக 25 ஆண்டுகளுக்கும் மேலாக ஆராய்ச்சியாளர்களின் கண்களுக்குப் பிடிபடாமல் இருந்த Miscellaneous Bundles என்ற ஆவணக் கட்டுக்கள் கிடைத்தன. இந்த ஆவணக் கட்டில் நூற்றுக்கும் மேலான மிக முக்கியமான ஆவணங்கள் அடங்கியுள்ளன. அவற்றில் சில:

1. Unrest files
2. Madras Police Abstracts of Intelligence
3. Tinnevelly Conspiracy Case.

மேற்கூறிய ஆவணங்கள் யாவும் சுதேசி இயக்கத்தின் உச்சக் கட்டங்களை உறுதிப்படுத்தும் ஆதாரங்கள் ஆகும். ஆனால் இவற்றிற்கு பொருள் பட்டியல் இல்லாத காரணத்தால்

இவை இருப்பதை அறியமுடியவில்லை. இக்குறையை இவ் வாவணங்களுக்குரிய பொருள் பட்டியல் தயாரிப்பதன் மூலம் எளிதாக நீக்கிவிடலாம். ஆனால் ஆவணங்களை முறைப்படுத்திப் பிரிப்பதில் ஏற்பட்டுள்ள முரண்பாடுகளை நீக்குவது மிகவும் கடினமாகும்.

காட்டாக, ஆராய்ச்சியாளர்கள் தம் ஆய்வுக்காக ஆவணங்களை ஆய்வதற்கு முன் அவ்வாவணங்களுக்குரிய துறைகளின் பொருள் பட்டியலைப் பார்க்க வேண்டும். அதில் உள்ள ஆவணங்கள் சாதாரணமானவையாக இருந்தால் அவை அத்துறைக்குரிய பிரிவில் வைக்கப்பட்டு இருக்கும். அப்படி இல்லையெனில் இரகசியப் பிரிவுக்குரியவை என அந்தப் பொருள் பட்டியலில் தெளிவாகக் குறிப்பிடப்பட்டிருக்கும். இதைக் கொண்டு ஆராய்ச்சியாளர் தமக்குரிய ஆவணங்களைப் பெற முடியும். மேலோட்டமாகப் பார்க்கும்பொழுது இத்தகைய அமைப்பால் எவ்விதக் கோளாறும் இல்லை எனக் கூறலாம். ஆனால் சுதேசி இயக்கத்தை ஆராயும்போது இத்தகைய அமைப்பில் முரண்பாடுகள் இருப்பது புலனாயிற்று. சில முக்கியமான ஆவணங்களை ஆய்வு செய்யும் போது, இத்தகைய ஆவணங்கள் பொருள் பட்டியலில் சாதாரணப் பிரிவில் இருப்பனவாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. உதாரணமாக அரசு ஆணை எண் 424, நீதித்துறை (Judicial) 18, மார்ச் 1910 என்னும் இவ்வாவணம் நீதித்துறை பொருள் பட்டியலில் சாதாரண ஆவணமாகக் காட்டப்பட்டுள்ளது. அதே போல் இவ்வாவணத்தை ஆய்ந்து பார்க்கும்போது 3 அல்லது 4 பக்கங் களில் உள்ள இவ்வாவணமானது சுப்பிரமணிய பாரதியார் பதிப்பாசிரியராக இருந்து நடத்திவந்த பத்திரிக்கைகளுக்குத் தடை விதிக்கும் பொருட்டு ஆங்கில அரசு மேற்கொண்ட நடவடிக்கைகளை விவரிப்பதாகும். இதில் புரியாத புதிர் என்னவென்றால், மிக முக்கியமான இவ்வாவணம், ஏன் 3 அல்லது 4 பக்கங்களை மட்டும் கொண்டுள்ளது என்பதாகும். இவ்வினாவிற்குரிய விடை பிற ஆவணங்களில் கிடைத்தது. அரசு செயலர்கள் தங்கள் குறிப்புகளில் மேற்கூறிய (எண் 424) ஆவணத்தைக் குறிப்பிட்டு பக்கம் 32, 50, என குறிப்பு எழுதியுள்ளனர். ஆனால் ஆணை எண் 424ல் 3 அல்ல பக்கங்களே உள்ளன. பிற பக்கங்கள் எங்கு ஒளிந்துகொண்ட மூளையை கசக்கிக்கொண்டபோது ஏன் மிக முக்கிய பக்கங்கள் இரகசியப்பிரிவில் வைக்கப்பட்டு இருக்கக்கூடாது என்ற

எண்ணம் எழுந்தது. இந்த எண்ணத்தை உறுதி செய்யும் பொருட்டு, அரசு எண் 424 ஆவணத்தை இரகசியப் பிரிவில் கேட்டு விண்ணப்பித்த போது எல்லையில்லா வியப்பிற்கு உரிய வகையில் இவ்வாவணம் அப்பிரிவில் இருந்து கிடைத்தது. அங்கு இவ்வாவணம் 100 பக்கங்களுக்கு மேல் இருக்கின்றது.

இதிலிருந்து புலப்பட்ட உண்மைகள்: மிக முக்கிய ஆவணங்கள் பல சாதாரண ஆவணம் எனக் குறிப்பிடப்பட்டு, அவ்வாவாணத்தில் 3 அல்லது 4 பக்கங்களே யாவரும் காணும் இடத்தில் வைக்கப்பட்டுள்ளன. அதே சமயத்தில மிக முக்கிய அரசுக் குறிப்புகள் உள்ள பிற பக்கங்கள் 'இரகசியப் பிரிவிற்கு' மாற்றப்பட்டு அதே எண் உள்ள மற்றொரு ஆவணத்தில் வைக்கப்பட்டதோடு அந்த எண்ணை அத்துறைக்குரிய பொருள் பட்டியலில் குறிப்பிடாமல் விட்டுள்ளனர். இத்தகைய காரணத்தால் ஆராய்ச்சியாளர்கள் மேற்கூறிய ஆவணத்தை மிக முக்கியமானது இல்லை எனக் கருதி ஒதுக்கிவிட்டனர். பாதுகாப்புப் பிரிவில் இருப்பதும் தெரியாமல் போய்விட்டது. ஆக இத்தகைய மிக முக்கிய ஆவணங்கள் இரண்டு ஆவணங்களாக்கப்பட்டு ஒன்று சாதாரணப் பிரிவிலும் மற்றொன்று இரகசியப் பிரிவிலும் வைக்கப்பட்டுள்ளன என்பது புதிய செய்தி.

இதைத்தவிர, Confidentialdisposals எனப்படும் மிக முக்கிய இரகசிய ஆவணங்கள் பற்றிய பொருள் பட்டியல் இல்லை. இவையும் இரகசியப் பிரிவில் பத்திரமாக வைக்கப்பட்டுள்ளன.

இத்தகைய முறைக்குக் காரணம் ஆங்கில அரசு மிக முக்கிய அரசுக் குறிப்புகள் பத்திரமாக வைக்கப்படவேண்டும் என்று கருதியதே ஆகும். இத்தகைய எண்ணம் இந்தியா விடுதலை அடைவதற்கு முன் பொருள் உடையதாக இருந்திருக்கும். இப்பொழுது அத்தகைய ஆவணங்கள் முறைப்படுத்தப்பட்டுப் பொருள் பட்டியல் செய்து ஆராய்ச்சியாளர்களின் கவனத்திற்குக் கொண்டு வருதல் நலம். அவ்வாறு செய்யவில்லையெனில் இக்கால வரலாற்றில் பல இடைவெளிகள் ஆதாரங்கள் அற்று, வரலாற்று முக்கியத்துவம் அற்றதாக ஆகிவிடும். 'உண்மை' வரலாறு எழுதப்படாமலேயே போய்விட வாய்ப்பு உள்ளது. ஆகவே இவ்வாவணங்கள் முறைப்படுத்தப்பட வேண்டியது இன்றியமையாததாகும்.

# 27. தமிழ்நாடும் தாய்லாந்தும் : தொன்மைத் தொடர்புகள்

ப. சண்முகம், சென்னை

தென்கிழக்கு ஆசியப் பகுதிகளுடன் இந்தியா பன்னெடுங்காலமாகவே பண்பாட்டுத் தொடர்புகளைக் கொண்டிருந்தது. இத்தொடர்புகளின் தன்மையை அறிந்து கொள்ளுவதற்காக ஜப்பான், தோக்கியோ பல்கலைக்கழகத்தின் தென்னாசியத் துறையின் பேராசிரியர் டாக்டர் நொபொரு கராஷிமா, ஜப்பானிய, இந்தியத் தொல்லியல் மற்றும் வரலாற்று ஆய்வாளர் குழு ஒன்றை அமைத்தார். இக் குழுவில் இந்தியா சார்பில் கே.வி. ரமேஷ், கே.வி. இராமன், எ. சுப்பராயலு மற்றும் கட்டுரை ஆசிரியர் ஆகியோர் இருந்தனர். முதல் முறையாக 1991 டிசம்பர், 1992 சனவ்ரி மாதங்களில் வியட்நாம் மற்றும் லாவோஸ் ஆகிய நாடுகளின் பகுதிகளைச் சுற்றிப்பார்த்து இந்தியத் தொடர்புக்கான சில முக்கிய சான்றுகள் கண்டயறியப்பட்டது.

இக்குழுவினர் இரண்டாம் முறையாக, சென்ற 1992 டிசம்பர் 1993 சனவரி ஆகிய மாதங்களில் மலேசியா மற்றும் தாய்லாந்து ஆகிய நாடுகளில் கள ஆய்வு நடத்தினர். இந்து, புத்த சமயங்கள் மற்றும் இந்தியப் பண்பாட்டின் தாக்கம், தொன்மை பற்றி அறிவதற்கான பல சான்றுகளை இவ்விரண்டு நாடுகளிலும் காணமுடிந்தது. இச்சான்றுகள் ஏறக்குறைய கி.மு. முதல் நூற்றாண்டிலிருந்து இந்தியாவுடன் மேற்கொண்ட உறவுகளை விளக்குகின்றன.

தமிழகத்துடன் கொண்ட பண்டைய தொடர்புகளை வலியுறுத்தும் புதிய சான்றுகள் சில இக்கள ஆய்வில் கிடைத்தன. இவற்றில் தாய்லாந்தில், கிளோங்தோம் (Klong Thom) என்ற பழந் துறைமுக நகரத்தில் தாய்லாந்து தொல்லியல் ஆய்வாளர்கள் நடத்திய அகழாய்வின் மூலம் கிடைத்த சில முக்கிய தொல்பொருள்கள் குறிப்பிடத்தக்கன. இப்பொருள்கள்

அவ்வூரில் உள்ள ஒரு புத்த மடத்தினர் நடத்தும் அருங் காட்சியகத்தில் வைத்துப் பேணப்படுகின்றன.

முதலாவது குறிப்பிடவேண்டிய தொல்பொருள் ஒரு சதுர வடிவச் செப்புக் காசு. இக்காசின் ஒரு பக்கம் புலியின் உருவமும், மறுபக்கம் குதிரை இழுக்கும் ரதம், மற்றும் யானை உருவங்கள் பொறிக்கப்பட்டுள்ளன. வேறு எழுத்துக்களோ பெயரோ பொறிக்கப்படவில்லை. இம் மாதிரியான சங்ககாலச் சோழர் காசுகள் தமிழகத்தில் பல கிடைத்துள்ளன. எனவே இக்காசு தமிழகத்திலிருந்து வாணிகர்களால் எடுத்துச் செல்லப்பட்ட சோழர் காசு என்பதில் ஐயமில்லை.

மற்றொரு சான்று, 8 செமீ X 4 செமீ பரப்பளவும் 3 செமீ தடிமனும் உடைய சிறிய பட்டைக்கல் ஆகும். இக்கல்லின் பின்பக்கம் கி.பி. 3-4ம் நூற்றாண்டு தமிழ்-பிராமி எழுத்தில் "பெரும்பதன் கல்" என இரண்டு வரிகள் பொறிக்கப் பட்டுள்ளன (ஒளிப்படம் 2).

இவ் எழுத்துக்களில் ம,ன என்ற இரண்டு எழுத்துக்களும் தமிழ்நாட்டுப் பகுதியில் மட்டுமே பயன்படுத்தும் வரிவடிவம் கொண்டவை. எனவே இக்கல் தமிழகத்திலிருந்து சென்றுள்ளது என்பதில் ஐயமில்லை. பெரும்பதன் என்பவர் ஒரு பொற்கொல்லராக அல்லது வாணிகராக இருக்கலாம். மேலும் இம்மாதிரியான பட்டைக் கற்களை இன்றும் தங்க வாணி கர்களும், நகை செய்வோரும் தங்கத்தின் மாற்றை அறிய உரைத்துப் பார்ப்பதற்குத் தம்முடன் எடுத்துச் செல்வதைக் காணலாம்.[1]

கி.பி. 3ஆம் நூற்றாண்டின் பின்னரும் வாணிகத் தொடர்புகள் இருந்துள்ளமை இதே ஊரில் கிடைத்த மற்றுமொரு காசின் மூலம் அறியலாம். இவ் வட்டக்காசின் ஒருபுறமும் காளைச் சின்னமும் மறுபக்கம் இரண்டு பாய் மரத்தூண்களைக் கொண்ட கப்பலும் காணப்படுகிறது. இக்காசில் உள்ள காளையின் உருவ அமைப்பைக் கொண்டு இது

---

1. நகைத் தொழில் செய்வோர் இக்காலத்தில் பத்தன் என்று அழைக்கப்படுவதை பதன் நினைவுக் கூர்கிறது என்பது பேரா.கே.வி. இராமன் அவர்கள் கருத்து

பல்லவர்களுடைய காசு எனலாம். எனவே பல்லவர் காலத்தில் (சுமார் 6ஆம் நூற்றாண்டு) தாய்லாந்து பகுதிகளுடன் தமிழக வாணிகர்கள் கொண்டிருந்த உறவு இதன்மூலம் புலப்படும்.

அடுத்து இரண்டு தமிழ்க் கல்வெட்டுகள் துணை புரிகின்றன. அவற்றுள் முதலாவது தாகுவாபா என்ற இடத்தில் கிடைத்த சிறிய கல்வெட்டாகும் (ஒளிப்படம் 3). தனிக்கல்லில் 6 வரிகளைக் கொண்ட இக்கல்வெட்டை ஏற்கனவே நீலகண்ட சாஸ்திரி[2] முதலியோர் பதிப்பித்துள்ளனர். இக்கல்வெட்டு 8 9 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது. தோண்டி ஏற்படுத்தப்பட்ட ஒரு குளத்தைப் பேணும் பொறுப்பை மணிக்கிராமத்தாருக்கும், சேனாமுகத்தாருக்கும் மற்றொரு குழுவுக்கும் ஒப்படைப்புச் செய்ததைக் கூறுகிறது.[3]

1 வர்மந் [கு]....

2 [ம]மாந்தாந நங் [கூ]....

3 .. தொட்ட குளம் பெ....

4 ... [ர]ணம் மணிக்கிராம..

5 ... சேனாமுகத்தார்க்கு

6 ... [ய] தார்க்கும் அடைக்கலம்

இதில் குறிப்பிடப்படும் குளம் குடிநீர்க்குளம் என்று தெரிகிறது. இது ஒரு சிறிய தீவுக்குள் உள்ளது. இக்கல்வெட்டுள்ள பலகைக் கல் இப்பொழுது நக்கோன் ஸி தம்மராத் (Nakhon Si Tammarat)என்ற நகர அருங்காட்சியத்தில் உள்ளது.

கி.பி. 12ஆம் நூற்றாண்டிலும் தமிழகத்துடன் உள்ள தொடர்பினை நிலை நிறுத்தும் வண்ணம் வேறு ஒரு கல்வெட்டு தாய்லாந்தில் கிடைத்துள்ளது. மேற்குறிப்பிட்ட நக்கோன் ஸி தம்மராத் நகரில் ஒரு பெரிய புத்தர் கோயிலில் இக்கல்வெட்டு

---

2. Journal of Oriental Research, VI (1932).

3. இப்பாடத்துக்கும் நீலகண்டசாஸ்திரியார் கொடுத்துள்ள பாடத்துக்கும் சிறிது வேறுபாடு உள்ளது. குளத்தின் பேர் அவநி நாரணம் என்று அவர் படித்துள்ளார். அப்பகுதி இப்பொழுது கல்லில் தெரியவில்லை. இடையில் கல் சிதைவுற்றிருக்கலாம்.

உள்ளது. கல்வெட்டு கி.பி. 1183 ஆம் ஆண்டில் தர்ம சேனாபதி என்பவர் சொற்படி அளிக்கப்பட்ட ஏதோ தானத்தைப் பற்றியது. கல்வெட்டில் சக ஆண்டு குறிப்பிடும் பகுதி சற்று சிதைந்திருந்த போதிலும் அதை 1105 என்று ஊகிக்கலாம் (ஒளிப்படம் 4).

1 ஸ்வஸ்தி சகா [ப்] ....

2 ... னூற்று அஞ்சு சென்ற [து]

3 .. ம் பெற்ற திங்கட்கி [ழமை]

4 ... கான் தெவராந தந்ம சேநா....

5 பரிசாவது ப்3ராஹ்மணர் பெ.....

6 ஸ்தி தந்ம சேநாபதிகள் சொற்படி [மூன்றுகூறிட்டு] ....

7 மக்கழுக்கும் ஒன்று...துகழுக்கும் ஒ....

8 ...வதுக்கு த3ந்மஞ் செ [ய்] யவு [மி] ப்படி தந்ம..செய்

9 ....த்தை அழிவு செய்தாருண்டாகில் கெங் [கை] க்கரையி

10 ... ங் குராப் பசுக் கொன்ற பாவமும்.... வதை செய்

11 ...மும் மாதாபி [தா] க் கொ [ன்றபா] வமும் ப்3ரஹ்மஸ்தி

12 ...பாவமும் .....காராம்பசு...

13 தெல்லாம் ...த்தந்மத்தை அழித்தார் த...

14 ...ல் விழுக தந்3ம சேநாபதிகள்....

# 28. கொடுமணல் கார்னீலியன் கல்மணிகள்

பா.ஜெயக்குமார், தஞ்சாவூர்

பெரியார் மாவட்டம் பெருந்துறை வட்டத்தில் நொய்யல் ஆற்றின் வடகரையில் கொடுமணல் அமைந்துள்ளது. நெசவுத் தொழிலுக்குப் பெயர் பெற்ற சென்னிமலையிலிருந்து மேற்கே 15 கிமீ தொலைவிலும், ஈரோடு நகரத்திலிருந்து தென் மேற்கே 40 கிமீ தொலைவிலும் இச்சிற்றூர் அமைந்துள்ளது. இங்கு 1985, 1986, 1989 மற்றும் 1990 ஆகிய நான்கு ஆண்டுகள் கோடைக் காலத்தில் தமிழ்ப் பல்கலைக்கழகக் கல்வெட்டியல் துறையினர் அகழாய்வுகளைப் பரந்த அளவில் மேற் கொண்டனர். இவ்வகழாய்வுகளின் போது சுமார் நாற்பதிற்கும் மேற்பட்ட அகழாய்வுக் குழிகளும் ஈமக்காட்டில் பதின்மூன்று கல்லறைகளும் அகழப்பட்டன. ஊரிருக்கைப்பகுதிக் குழிகளில் சுமார் 2 மீட்டர் ஆழத்திற்குப் பண்பாட்டு எச்சங்கள் காணப் படுகின்றன. இங்குக் கிடைக்கின்ற மண்பாண்ட வகைகளைக் கொண்டு இதன் பண்பாட்டுக் காலத்தை இரு கட்டங்களாகப் பிரிக்கலாம். இவற்றில் முதல் காலகட்டத்தைச் சேர்ந்த மக்கள் பெரும்பாலும் கைவினைஞர்களாக அரிய கல்வகைகளை அடிப்படையாகக் கொண்டு தங்களது தொழில்களை அமைத்துக் கொண்டனர். இரண்டாம் காலகட்டத்தில் வேளாண்மையும் முக்கியத் தொழிலாகக் காணப்படுகிறது.

இந்த அகழாய்வில் கிடைத்த பலவகையான பொருள் களில் பளிங்கு, கார்னீலியன் (Carnelian) பச்சை (beryl), கார்னட் (garnet), லாபிஸ் லசுலி (Lapis Lazuli) முதலிய அரிய கற்களைக் கொண்டு செய்த மணிகள் குறிப்பிடத் தக்கவை. அவற்றுள் கார்னீலியன் மணிகளைச் சிறப்பாக ஆய்வுக்கு எடுத்துக் கொள்கிறது இக்கட்டுரை.

கார்னீலியன், பவளம் போன்றுள்ளதாலும் அதன் நிறம், வண்ணம் மற்றும் பட்டை தீட்டத் தேவையான உறுதி ஆகிய குணங்கள் கொண்டுள்ளதாலும், இம்மணிக்கல் பழங்காலம் முதல் பயன்பாட்டில் உள்ளது. தமிழில் 'சூதுபவளம்' என இது அழைக்கப்படுகிறது. கால்சிடனி (chalcedony) என்ற கல்லின்

ஒருவகையே கார்னீலியன் ஆகும். கால்சிடனி என்ற கல் நுண்ணிய பளிங்கு வகையைச் சேர்ந்த பாறையுள் திரளும் படிகம் ஆகும். நிறத்திற்கு உகந்தவாறு அக்கற்களின் பெயர்கள் மாறுபடுகின்றன. இதன்படி, சிவப்பு நிறமுடைய கல் 'கார்னீலியன்' என்றும், கரும்பச்சை நிறம் கிரிசோப்ரஸ் (chrysoprase) என்றும், கருப்பு, வெள்ளை அல்லது சாம்பல் நிறம் கலந்த வெள்ளை 'ஆனிக்ஸ்' (onyx) என்றும், மஞ்சள் சிவப்பு, காவி அல்லது பழுப்பு நிறம் ஜாஸ்பர் (jasper) என்றும் அழைக்கப் படுகின்றன. இவைகள் அனைத்தும் ஓரளவு அல்லது முழுமை யாக ஒளி ஊடுருவாத தன்மை கொண்டவை (Cur zio *1986 : 198*).

*1922* ஆம் ஆண்டு மொகஞ்சதாரோவில் கிடைக்கப் பெற்ற வெள்ளை நிறக் கோடுகளைக் கொண்ட கார்னீலியன் மணிகளும் அதன் தொடர்ச்சியாகப் பிற இடங்களில் கிடைக்கப் பெற்ற கார்னீலியன் மணிகளுமே இது தொடர்பான ஆய்வை இந்திய நாட்டில் மேற்கொள்ளக் காரணமாக அமைந்தன (Dikshit *1941: 1*). *1925* ஆம் ஆண்டு மெகே என்ற தொல்லி யலாய்வாளர், வெள்ளை நிறக் கோடுகளைக் கொண்ட கார்னீலியன் மணிகளின் வாயிலாக சுமேரியாவிற்கும் சிந்துவெளி நாகரிகத்திற்கும் இருந்த தொடர்பை வெளிப் படுத்தினார் (Mackay *1925: 697*). இந்தியாவிலிருந்து சென்றதாகக் கருதப்படும் கார்னீலியன் மணிகள் உலகின் பல இடங்களில் குறிப்பாக, சீனாவின் தென்பகுதியிலும் தென்கிழக்கு ஆசிய நாடுகளிலும் அண்மைக் காலத்தில் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன (Yokokura *1992: 145-147*).

கொடுமணலைப் பொறுத்தவரையில் ஊரிருக்கைப் பகுதியில் அகழ்வு செய்யப்பட்ட குழிகளில் மொத்தம் *54* கார்னீலியன் மணிகள் மட்டுமே கிடைத்தன. இவைகள் அனைத்துமே முதல் காலகட்டத்தைச் சேர்ந்தவையாகும். மாறாக ஈமக் கல்லறைகளில் அவை ஏராளமான அளவில் கண்டு பிடிக்கப்பட்டன. கல்லறை எண் *8* இல் *232* மணிகளும், எண் *5* இல் *2040* மணிகளும் மற்றும் எண் *10*இல் *991* மணிகளும் கிடைத் தன. பிற கல்லறைகளில் பரவலாக இருந்தன. கல்லறை எண் *5*இல் சுமார் *2000* கார்னீலியன் மணிகள் நெல்லுமி, சாம்பல் மற்றும் மணல் நிரப்பப் பெற்ற ஒரு சிறு குழியில் ஒருசேர

இட்டு வைக்கப் பெற்றிருந்தன. இதுபோல ஒரே இடத்தில் அதிக மணிகள் கிடைத்திருப்பது இதுவே முதல் முறையாகும்.

| கல்லறை எண் | கார்னீலியன் மணிகள் எண்ணிக்கை |
|---|---|
| 1 | 7 |
| 2 | 80 |
| 5 | 2040 |
| 6 | 19 |
| 8 | 232 |
| 10 | 991 |
| 11 | 12 |
| 12 | 8 |
| 3, 4, 7, 9, 13 | 0 |
| மொத்தம் | 3389 |

தென்னிந்தியாவில் இதுவரை பெருங்கற்படைக் கால மக்கள் வாழ்ந்த பிற பகுதிகளில் மேற்கொள்ளப்பட்டுள்ள அகழாய்வுகளில் குறைந்த அளவு எண்ணிக்கையுடைய கார்னீலியன் மணிகளே கிடைத்துள்ளன. இத்தகைய மணிகள் தமிழ்நாட்டில், செங்கல்பட்டு மாவட்டத்தில் குன்னத்தூர், சாணூர், மதுரை மாவட்டத்தில் பரவை, கோயம்புத்தூர் மாவட்டத்தில் வெள்ளலூர், சூலூர், கணியம்பூண்டி, வட ஆர்க்காடு அம்பேத்க்கார் மாவட்டத்தில் மோட்டூர், பையம் பள்ளி, ஒடுகத்தூர் கேரள மாநிலத்தில் போர்க்களம், செத பிரம்பா; கருநாடக மாநிலத்தில் மாஸ்கி, பிரம்மகிரி, சந்திர வள்ளி, ஆந்திர மாநிலத்தில் இருளபண்டா, சகத்தூர் பாண்டிச் சேரி மாநிலத்தில் சுத்துக்கேணி, ஆரவள்ளி, முத்தரபாளையம் ஆகிய இடங்களில் கிடைத்துள்ளன. இவற்றில் அதிகமாகக் கிடைத்தவை எனப் போர்க்களத்தில் 48 மணிகளும் சூலூரில் 39 மணிகளும் ஆகியவற்றையே குறிப்பிடலாம்.

## கொடுமணல் மணிகளின் வகைகள்

கொடுமணலில் கிடைத்துள்ள மணிகளை (பார்க்க: வரைபடம் 1) நான்கு வகைகளாகப் பிரிக்கலாம். அவை 1. வட்ட வடிவம் 2. பீப்பாய் வடிவம், 3. இருகூம்பு வடிவம் மற்றும் 4.

கோள வடிவம். இவ்வகை மணிகளில் மிகுதியானவை வெள்ளைநிற அலங்காரக் கோடுகளைக் கொண்டுள்ளன.

வட்ட வடிவமான முதல் வகை மணிகள் பொதுவாக 8 மில்லி மீட்டர் சுற்றளவு கொண்டவையாகவும், சிறிய மணிகள் 5 மிமீ சுற்றளவும், பெரிய மணிகள் 12 மிமீ சுற்றளவும் கொண்டவையாகவும் காணப்படுகின்றன. இம்மணிகளின் தடிமன் 2-3 மிமீ அளவுடையனவாக உள்ளன. இவ்வகை மணிகள் இருபுற விளிம்புகளிலும் எளிமையான, வெள்ளைநிற அலங்காரக் கோடுகளைக் கொண்டுள்ளன. ஆனால், கல்லறை எண் 2இல் கிடைக்கப் பெற்ற மணிகளின் மேல் பரப்பில் வெள்ளை நிறத்தில் பலவகையான வடிவங்கள் அதாவது சிலுவை, வட்டத்தினுள் சிலுவை, சதுரத்திற்குள் சதுரம், வட்டமான புள்ளிகளுக்கு நடுவில் இரு செங்குத்துக் கோடுகள், புள்ளிகள் கொண்ட வட்டத்தின் நடுவில் ஒரு புள்ளி, விளிம்பிலுள்ள வட்டமான புள்ளிகளுக்கு நடுவில் ஒரு புள்ளி, விளிம்பிலுள்ள வட்டமான புள்ளிகளுக்கு நடுவில் இரு படுக்கைக் கோடுகள் மற்றும் சாய் சதுர வடிவம் போன்றவை காணப்படுகின்றன.

பீப்பாய் வடிவம் கொண்ட மணிகள் அலங்காரக் கோடுகள் அற்றதாக உள்ளன. இரு கூம்பு வடிவமுடைய மணிகள் வெள்ளைநிறக் கோடுகளால் வரையப்பட்ட ஏதாவது ஒரு அலங்கார வடிவத்தைக் கொண்டுள்ளன. சில மணிகள் குறுக்குமறுக்குக் கோடுகளைப் பெற்றிருக்க, சுமார் 50 சதவீதத்திற்கும் அதிகமான மணிகள் அலையலையான மூன்று கோடுகளை ஓரங்களிலும் நடுவிலும் கொண்டு காணப் படுகின்றன. சில மணிகள் ஒரே மாதிரியான மூன்று சம கோடுகளைக் கொண்டதாக உள்ளன. ஒரு மணியில் மட்டும் இரண்டு சமகோடுகளுக்கு நடுவில் ஒரு அலை கோடு காணப்படுகிறது.

நான்காம் வகை மணிகளில் வெள்ளைநிறக் கோடுகள் காணப்படவில்லை. கல்லறை எண் 2இல் கிடைத்த கோள வடிவமுடைய ஒரு மணி சாய்சதுர மாதிரியில் பட்டை தீட்டப் பட்ட பல முகப்புகளை உடையது.

நமது நாட்டில் வெள்ளை நிறக் கோடுகளுடைய கார்னீலியன் மணிகளை உருவாக்கும் நுட்பத்திறன் சிந்துவெளி நாகரிகக் காலம் முதல் இன்று வரை இருந்து வருவதை அறிய முடிகின்றது. உஜ்ஜயினியில் (Ujjain) கி.மு. 2 ஆம் நூற்றாண்டில் நிலவிய கார்னீலியன் மணிகளை உருவாக்கும் நுட்ப முறைகளைப் பற்றி என்.ஆர். பானர்ஜி மிகத் தெளிவாக அவரது கட்டுரையில் விளக்கியுள்ளார். (Banerjee 1959 : 189-196). கொடுமணலில் கிடைக்கப் பெற்ற கார்னீலியன் மணிகளும் மேற்கூறிய காலத்தைச் சேர்ந்தவை என்பதை நினைவில் வைக்க வேண்டும்.

முதலில் மூலப் பொருளைச் சிறுசிறு கட்டிகளாக உடைத்தெடுத்து அக்கட்டிகளிலிருந்து முன்போலவே சிறு துணுக்குகளாக அல்லது சில்லுகளாக எடுத்து, அதிலிருந்து மிகச் சிறிய மணிகள் செய்யுமளவிற்கு மிகச் சிறிய கட்டிகளாகப் பிரித்தெடுக்கப்படுகின்றன. ஒரு குறிப்பிட்ட அளவு சில்லு களைப் பரிசோதித்ததில் அவைகள் தட்டி எடுக்கப்பட்ட தற்கான கூறுகளைக் காட்டுகின்றன. இத்தகைய சில்லுகளில் பல அதன் ஒழுங்கற்ற வடிவம், கனம் அடிப்படையில் பயனற்ற வையாக ஒதுக்கப்பட்டன. நேர்த்தியான சில்லுகளிலிருந்து கரடுமுரடான நிலையில் மணிகள் முதலில் தேவையான வடிவ அமைப்பில் உருவாக்கப்படுகிறது. இத்தகைய கரடுமுரடான முதல் கட்ட நுட்ப அளவிலிருக்கும் மணிகள் ஒரு பானையில் இடப்பட்டு, அப்பானையின் வாய் இதே வகைக் கல்லாலே இறுக மூடப்பட்டுச் சூட்டடுப்பில் வைக்கப்படுகின்றன. பானையின் வாய் கார்னீலியன் மூலப் பொருளான கால்சிடனி கல் மூலம், இறுக்கமாக மூடப்படுவதற்குக் காரணம், பானைக்குள் இருக்கும் சூடு பானையின் வாயிலுள்ள இடை வெளியினால் வெளிச் சென்று விடாமல் தடுத்து நிறுத்தி, பானையினுள் ஒரே சீரான வேற்று வண்ணம் கிடைக்க வழி வகுக்கிறது. சிலநேரம், முதல் கட்டத்தில் உள்ள மணிகள் கொண்ட பல பானைகள் ஒரே நேரத்தில் இதுபோல வரிசையாக வைக்கப்பட்டு மந்தமான சூட்டில் வைக்கப் படுகின்றன. சிலநேரங்களில் முற்றிலும் முடிவு பெறாத

மணிகளும் இதே போல வண்ண மாற்றத்திற்காக அடுப்பில் வைக்கப்படுகின்றன. மந்தமான சூட்டின் வாயிலாகவே வேற்று வண்ணம் கொடுக்கப்பட்டிருக்கின்றன என்பது இதன் மூலம் தெரிய வருகிறது. இதன்படி, இவ்வகைக் கற்கள் நிறத்தில் மங்கலான மஞ்சள் முதல் இளஞ்சிவப்பு வரை காணப் படுகின்றன.

மணிகள் நன்றாகத் தேய்க்கப்பட்டு வழவழப்புக் கொடுப்பதற்கு இடைப்பட்ட கட்டத்தில் அவைகளுக்குத் துளை யிடப்பட்டிருக்க வேண்டும். மணிகளின் இரண்டு பக்கங் களிலிருந்தும் துளைகள் இடப்பட்டிருக்கின்றன. இதனால் சில மணிகளில் நேராகச் சந்திக்காமல் இரண்டு பக்கத் துளைகளும் வெவ்வேறு கோணத்தில் நிற்பதைக் காணலாம் கொடு மணலில் கிடைத்துள்ள துளையிடப்பட்டு முற்றிலும் முடிக்கப் பெற்ற மற்றும் அரைகுறையாக முடிக்கப் பெற்ற மணி களிலிருந்து மேற்கூறிய செய்திகள் தெரிய வருகின்றன. சில வேளைகளில், துளையிடப்பட்டதற்குப் பிறகும் ஒரு வகையான தேய்ப்புப் பொருள்களைக் கொண்டு மீண்டும் மணிகள் வழவழப்புச் செய்யப்பட்டுள்ளன. மணிகள் செய்யப் பயன்படுத்தப் பட்டதாகக் கருதப்படும் கருவிகளும் அகழாய்வுகளில் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன.

கொடுமணல் ஒரு சிறந்த வாணிக மையம்

இத்தகைய கார்னீலியன் கற்கள் கொடுமணல் பகுதி யிலேயே கிடைத்தனவா அல்லது வேறு இடங்களிலிருந்து கொடுமணலுக்குக் கொண்டு வரப் பட்டனவா என்ற கேள்வி எழுகின்றது. பொதுவாகவே கொடுமணல் மற்றும் அதனைச் சுற்றியுள்ள பகுதிகள் இரும்பு, பளிங்கு (quartz) மற்றும் பெரில் (beryl) போன்றவற்றின் மூலப் பொருள்களுக்குப் பெயர் பெற்ற பகுதிகளாம். இங்குப் பல இடங்களில் பளிங்கு மற்றும் அவ்வகை சார்ந்த பாறைப் படிகங்கள் அதிகமாகக் கிடைப்பதைக் காணலாம். இருப்பினும், இப் பகுதிகளில் கால்சிடனி அல்லது கார்னீலியன் மூலப் பொருள்கள் எங்கும் கிடைக்கவில்லை. இந்தியாவில் அவை குசராத் மாநிலத்தில் மட்டும் பழங்காலம் தொட்டுக் கிடைத்து வருகின்றன. ஆகவே, கொடுமணலில் நமக்குக் கிடைக்கின்ற இக்கல்வகை குசராத்திலிருந்து கொண்டு

வரப்பட்டிருக்க வேண்டும் எனக் கருதலாம். கார்னீலியன் மூலப்பொருள் கொடுமணலில் கிடைக்காத பொழுதும் அவை வெளியிலிருந்து கொண்டுவரப்பட்டு இங்கு மணிகளாகத் தயாரிக்கப்பட்டதற்கான தடையங்கள் கிடைத்துள்ளன. ஊரிருக்கைப் பகுதியில் ஒரு குழியில் 120 செமீ ஆழத்தில் கார்னீலியன் சில்லுகள் கிடைத்துள்ளன. கார்னீலியன் சில்லுகள் உள்ள இதே அடுக்கில் மணல்குழிகளின் வரிசை அமைப்போடு இருந்த ஒரு நீள் சதுரவடிவ தரைப்பகுதியைக் கார்னீலியன் கல்தொழில் நடைபெற்ற பட்டறையின் ஒரு பகுதியாகக் கொள்ளலாம்.

கொடுமணலில் கார்னீலியன் வாணிகம் நடைபெற்றதை உறுதி செய்யும் வகையில் அகழாய்வில் மேலும் சில சான்றுகள் கிடைத்துள்ளன. பல பானை ஓடுகளில் ஆட்பெயர்கள் பழந்தமிழ் அல்லது பிராமி எழுத்துக்களில் கீறப்பட்டுள்ளன. இப்பெயர்களில் அதிகமானவை சங்க இலக்கியங்களிலுள்ள பெயர்களுடன் ஒப்பிடத்தக்கவையாக இருப்பினும், விசாகி, வருணி மற்றும் குவிரியன் (குபேரன்) போன்ற பெயர்கள் நிச்சயமாக வடஇந்தியச் சாயல் கொண்டு விளங்குகின்றன. இங்குக் கிடைத்த பெயர்களுள் மற்றுமொரு அரிய பெயர் 'நிகம' என்பதாகும். இச்சொல் பிராகிருத மொழியில் வாணிகக் குழுவைக் குறிக்கும் பெயர். சில எழுத்துக்கள் இலங்கைப் பிராமி எழுத்துக்களை ஒத்துள்ளன. மேற்கூறிய சிறப்புப் பெயர்களிலிருந்து கொடுமணல் பெருங்கற்படைக் கால மக்கள் அக்காலத்திலேயே வட இந்தியா மற்றும் இலங்கை போன்ற தூர நாடுகளுடன் வாணிகத் தொடர்பு கொண்டிருந்தனர் என்பது தெளிவாகிறது.

வட இந்தியா, இலங்கை மட்டுமன்றி ரோம நாட்டுடனும் கொடுமணல் தொடர்பு கொண்டிருந்தது. பொதுவாக, கொங்கு நாடு ரோமநாட்டு நாணயப் புதையல்களுக்குப் பெயர் பெற்றதாகும். இப்பகுதிகளில் பல இடங்களில் ரோமநாணயங்கள் குவியல்களாகவும், தனியாகவும் கிடைத்துள்ளன. கிடைத்தும் வருகின்றன. மேலும், கொடுமணல் அகழாய்வில் எடுத்த ரோம நாட்டுக்கே உரிய 'ரூலட்' (Rouletted) பானை ஓடுகள் சில கொடுமணலிலிருந்து பல அரிய

கல்மணிகள் ரோம நாட்டிற்கு ஏற்றுமதி செய்யப்பட்டிருக்க வேண்டும் என்பதை உணர்த்துகின்றன.

கி.பி. 1-3 ஆம் நூற்றாண்டுக் காலகட்டத்தைச் சேர்ந்த சங்க இலக்கிய நூலான பதிற்றுப்பத்து சேர மன்னனுக்குச் சொந்தமான கொடுமணம் என்ற இடம் அரிய கல் மணிகளுக்குப் புகழ்பெற்று விளங்கியதாகக் குறிப்பிடு கின்றது. கொடுமணம் என்ற இப்பெயர் கொடுமணலின் பழமையான பெயராக இருக்கலாம். அவ்வாறு இருக்குமானால் சங்க இலக்கியக் குறிப்பு அகழாய்வின் மூலம் தெளிவாக நிரூபிக்கப்பட்டுள்ளது எனலாம்.



| | | |
|---|---|---|
| Curzio cipriani | 1986 | *Precious stones*, Macdonald Book, London. |
| Dikshit, M.G. | 1949 | *Etched Beads in India*, Poona |
| Mackay, E. | 1925 | "Sumerian connection with Ancient India", *Journal of Royal Asiatic Society.* |
| Mackay, E. | 1931 | "Further Link between Ancient Sind, Sumer and Elsewhere", *Antiquity* Vol V. |
| Yokokura, Masayuki | 1992 | "Sa Huynh bunka-to garasu-no michi (Sa Huynh culture and glass road)". Wa-to etsu: nihon-bunka-no genkyo-we saguru (wa and yueh searching for the origin of Japanese culture) Higashi-asia bunka koryu-shi kenkyu-kai (Society for Historical studies of cultural exchange in East Asia), saga, (in Japanese) |
| Banerjee, N.R. | 1959 | "The Technique of the Manufacture of Stone Beads in Ancient Ujjain" *Journal of Asiatic Society*, Vol. I No.2. |

# 29. திருவேற்காட்டில் தொன்மையான ஊரிருக்கை கண்டுபிடிப்பு

சு. இராசவேலு, சென்னை

சென்னைக்கு அருகில் 17 கிமீ தொலைவில் உள்ள திருவேற்காடு கருமாரிஅம்மன் கோயிலுக்குப் புகழ்பெற்ற தலமாகும். இவ்வூரின் மேற்கில் 1 கிமீ தொலைவில் சோழர்காலத்தைச் சேர்ந்த தூங்கானைமாடக் கற்றளிக் கோயில் ஒன்றுள்ளது. இக்கோயிலின் மேற்கில் கூவம் ஆறு ஓடுகின்றது. கோயிலின் தென்புறத்தில் கிழக்குக் கரையை ஒட்டியவாறு ஏறக்குறைய 25 ஏக்கர் நிலப்பரப்பில் மண்மேடு ஒன்று உள்ளது. இந்த மண்மேட்டில் ஆற்றின் அரிப்பினாலும் செங்கற் சூளையிட குழிகள் தோண்டப்பட்டு வருவதாலும் பல அரிய தொல்பொருள்கள் மேற்பரப்பிலேயே தென்படுகின்றன.

இங்கு ஏறக்குறைய் 2000 ஆண்டுகளுக்கு முற்பட்ட கறுப்பு சிவப்பு மண்கலன்களும் பிற மண்கலன்களும் கிடைக்கின்றன. இவற்றுடன் கி.பி 4-5 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த கூம்பு வடிவச்சாடிகளும் உள்ளன (ஒளிப்படம் 8). இத்தகைய சாடிகள் அரிக்க மேட்டில் கிடைத்த ‘ஆம்போரா’ எனப்படும் ரோமானியச் சாடிகளின் உருவமைப்பை ஒத்தவை. ஆனால் இவை உள்ளூரிலேயே வனையப்பட்டவை. இவ்வகை உள்ளூர் ரோமானியச் சாடிகள் காஞ்சிபுரம், வசவசமுத்திரம் அகழாய்வுகளில் கிடைத்துள்ளன. செங்கற்களும் பழைய உறைகிணறுகளும் இம்மண்மேட்டில் காணப்படுகின்றன. அகழாய்வு மேற்கொண்டால் இவ்வூரிருக்கையின் தன்மையைத் தெளிவாக அறிய இயலும்.

# 30. பெருமுக்கல் ஏரித் தூம்பு

கொடுமுடி ச. சண்முகன், மாமல்லபுரம்
ப.சண்முகம், சென்னை

பெருமுக்கல் (திண்டிவனம் வட்டம், தென் ஆர்க்காடு மாவட்டம்), திண்டிவனத்தில் இருந்து கிழக்கே சுமார் 10 கிமீ தொலைவில் மரக்காணம் செல்லும் வழியில் உள்ளது. ஊரில் ஒரு குன்றின் மீது குலோத்துங்க சோழன் காலக் கோவில் உள்ளது. இவ்வூரில் 11 கல்வெட்டுக்களை மத்திய அரசின் கல்வெட்டுத் துறையினர் படியெடுத்துள்ளனர்.

ஊரின் எல்லையில் பெரிய ஏரி உள்ளது. இவ் ஏரி இப்பொழுது விழுப்புரம் பொதுப் பணித்துறை கோட்டப் பரப்பில் உள்ளது. இது பிற்காலச் சோழர் கால முதற்கொண்டு பயன்பாட்டில் இருந்துள்ளது. இவ் ஏரியில் பழங்காலத் தூம்புகள் நான்கு உண்டு. இவை அனைத்தும் தற்பொழுது பழுது பட்டுள்ளன. அத் தூம்புகளில் ஒன்றில் பிற்காலச் சோழர் கால எழுத்தில் வெட்டப்பட்ட கல்வெட்டு ஒன்று உள்ளது. இக்கல்வெட்டு இதுவரை படியெடுக்கப்பட்டதாகத் தெரியவில்லை.

1 ஸ்வஸ்தி ஸ்ரீ இராஜ இராஜ வள
2 நாட்டு பொய்யிற் கூ
3 ற்றத்து கோனூருடையா
4 ந் அரயந் காக்குநாகந்

இத்தூம்பைக் காக்குநாகந் செய்தான் எனலாம். மேலும் இவ்வூரில் காணப்படும் விக்கிரம சோழனின் 3ஆம் ஆட்சி ஆண்டுக் கல்வெட்டு, காக்குநாகநால் மலைக்கோவில் கட்டப்பட்ட செய்தியைத் தருகிறது. இவ்விருவரும் ஒருவரே என்று கருதினால் கி.பி. 1121 ஆம் ஆண்டளவில் ஏரி சீரமைக்கப்பட்டது எனலாம். இவ் ஏரியின் மற்ற தூம்புகளும் இக்காலத்தைச் சார்ந்தவையாகலாம்.

இவ் ஏரியிலிருந்து நீர் வெளியேற மதகு இன்று கரையை ஒட்டி அமைக்கப்பட்டுள்ளது. நீர் செல்வதைக் கட்டுப்படுத்தத்

தடுப்பும் அதனை இயக்க திருகுப் பொறியும் அமைக்கப் பட்டுள்ளது. இம்மதகுக்கு நேரே குளத்தின் உட்பகுதியில் சுமார் 20 மீட்டர் தொலைவில் பிற்காலச் சோழர் தூம்பு உள்ளது. இத்தூம்பின் தன்மையை அறிவதற்கு அவ்விடத்தில் சிறிய சோதனை அகழாய்வு நடத்தினோம். அதன் முடிவுகள் கீழே தொகுத்தளிக்கப்பட்டுள்ளன.

இத்தூம்பின் கட்டமைப்பில் கருங்கற்களும், வாய்க்காலின் கூரைப் பகுதிக்குச் செங்கற்களும் பயன்படுத்தப்பட்டுள்ளன. இத்தூம்பு 3.40 X 2.30 சதுரமீட்டர் அளவுடைய செவ்வக முற்றத்தில் அமையப் பெற்றுள்ளது. (வரைபடம் : 1). அதன் தலைப்பகுதியில் (நீர் வெளியேறும் பகுதி) 3 மீட்டர் உயரமுள்ள இரண்டு தூண்கள் 1.10 மீட்டர் இடைவெளியில் நிறுத்தப்பட்டுள்ளன. இத்தூண்கள் 35 செமீ சதுரப் பக்கங்கள் கொண்டவை. இத்தூண்கள் மூன்று சதுரங்களும் அதன் இடைப்பகுதிகளில் 10 பட்டைகளும் கொண்டு உள்ளன. இப்பட்டைகள் ஓர் இடைக்கட்டுடன் இணைக்கப்பட்டுள்ளன. சிற்ப வேலைப்பாடுகளுள்ளன என்றாலும், மிகுந்த கலைத்திறன் கொண்டவை எனக் கூற இயலாது. தூண்கள் ஒவ்வொன்றின் உச்சியிலும், ஒரு குமிழ் அமைந்துள்ளது. இரண்டு தூண்களை இணைக்கும் உத்தரம் பொருத்துவதற்கு இக் குமிழ்கள் அமைக்கப்பட்டன. இப்போது கல் உத்திரம் காணவில்லை.

இத்தூண்களின் வெளிப்புறத்தைச் சார்த்தி 160 செமீ அகலமும் 65 செமீ உயரமும் 20 செமீ கனமுடைய ஒரு பலகைக் கல் தடுப்பு உள்ளது. கரைப்பக்கம் மண் சரியாமல் இருக்க இத்தடுப்பு ஏற்படுத்தப் பட்டுள்ளது. செவ்வக முற்றத்தின் முன்பகுதியில் மேலும் இரண்டு பலகைக் கற்கள் 84 செமீ. இடைவெளியில் நிறுத்தப்பட்டு உள்ளன. இவைகள், தலைப்பகுதியில் உள்ள நீண்ட தூண்களுக்கு இணையாக அமைக்கப்பட்டு உள்ளன. இக்கற்கள் ஒவ்வொன்றும் 65 செமீ அகலமும் 84 செமீ உயரமும் 15 செமீ கனமுமுடையவை (வரைபடம் : 2).

செவ்வக முற்றத்தின் நடுப்பகுதியில் 2.30 மீ நீளமுடைய கால்வாய் அமைந்துள்ளது. இக்கால்வாயின் இருபுறமும் சிறு

செங்கற்கள், சரளைக் கற்கள் மற்றும் காரையுடன் கூடிய கலவையால் கெட்டிப்படுத்தப்பட்ட தரை அமைக்கப் பெற்றுள்ளது. இத்தரை ஏறக்குறைய 30 செமீ கனமுடையதாகும். தூம்பின் நடுப்பகுதியில் உள்ள கால்வாயின் இரு சுவர்களும் கருங்கல் திண்டுகளைக் கொண்டதாகும். இக் கால்வாயின் தரைப்பகுதி பலகைக் கற்களால் ஆனது. இக்கால்வாய் 22 செமீ ஆழமும் 22 செமீ அகலமும் உடையது. இக்கால்வாயினைப் பலகைக் கல்லால் மூடியிருக்க வேண்டும். அக்கல் தற்போது காணப்படவில்லை. இக்கல்லின் ஒரு புறம் துளை ஒன்று இடப்பட்டு இருக்கும். அதன் வாயிலாக குளத்து நீர் அடியில் உள்ள கால்வாயை அடையும். அத்துளையை அடைக்கவும், திறக்கவும் ஒரு பம்பர வடிவக் கட்டை உண்டு. இக்கட்டை சாதாரணமாக மேல் விட்டத்திலிருந்து ஒரு கழியின் மூலம் இத்துளைக்கு நேராகத் தொங்க விடப்பட்டிருக்கும். இக்கால்வாய் தலைப்பகுதியில் உள்ள தடுப்புக் கல்லுக்குக் கீழே சென்று ஏரிக்கு வெளியே உள்ள கால்வாயுடன் இணைக்கப் பட்டுள்ளது. இக்கால்வாயின் கூரைப்பகுதி விதானம் போல செங்கற்களால் அமைக்கப்பட்டுள்ளது.

இவ்வமைப்புடன் கூடிய தூம்புகள் சோழர் காலத்திற்கு முன்பிருந்தே பயன்பாட்டில் இருந்திருக்க வேண்டும். இத்தூம்பு பிற்காலச் சோழர் காலத்தைச் சார்ந்தது என்பதில் ஐயமில்லை. குளத்தினுள்ளேயே அமைக்கப்பெற்ற இத்தூம்பின் மூலம், குளத்தில் நீர் குறைவாக இருந்த காலத்திலும் அதை முழுவதுமாக வெளியேற்ற முடியும் என்பது இதன் சிறப்பு. தற்போதைய புதிய மதகு கரை அருகில் உள்ளது. புதிய மதகின் அருகில் அடிக்கடி வண்டல் சேர்ந்து விடும். இக்குறை பழைய மதகில் இல்லை. பண்டைத் தொழில் நுட்பச் சிறப்பிற்கு இது ஒரு சான்றாகும்.

# 31. செய்தித் திரட்டு

## 31.1. கரூரில் மேலும் சில அரிய தொல்பொருள்கள்

கடந்த சில ஆண்டுகளாக திருச்சி மாவட்டம் கரூரில் அமராவதி ஆற்றுப் படுகையிலிருந்து கி.மு. 2ஆம் நூற்றாண்டு முதல் கி.பி 2 ஆம் நூற்றாண்டு வரை உள்ள பல முக்கியத் தொல்பொருள்கள் எடுக்கப்பட்டுள்ளன. பழம் எழுத்துக்கள் கொண்ட மோதிரங்கள், மணிகள், முத்திரைகள், சேரர், சாதவாகனர் காசுகள் என்று பல அவற்றுள் அடங்கும். அண்மையில் மேலும் சில அரிய பொருள்கள் கிடைத்துள்ளன. ஒரு முத்திரை மோதிரத்தில் "ஸாதன் ஸாதிவேகி3" என்ற பெயர் கி.பி. முதல் நூற்றாண்டைச் சேர்ந்த தமிழ் (அல்லது பிராமி) எழுத்தில் பொறிக்கப்பட்டுள்ளது (ஒளிப்படம் 7).

தென்னிந்தியாவுக்கும் ரோமானிய நாட்டுக்குமிடையே சிறப்பாக நடைபெற்ற கடல்வழி வாணிகத் தொடர்பை கொங்கு நாட்டில் பல இடங்களில் கிடைத்துள்ள ரோமானிய தங்க, வெள்ளி நாணயங்கள் விளக்குகின்றன. கரூரில் மட்டும் சென்ற நூற்றாண்டில் 500க்கும் மேற்பட்ட ரோமானிய நாணயங்கள் புதையலாகக் கிடைத்தன. அண்மையில் மேலும் இரண்டு தங்க நாணயங்களும் சில தங்க மோதிரங்களும் கிடைத்துள்ளன. இரண்டு நாணயங்களும் அந்தோனியஸ் பயஸ் (கி.பி 138_ 161) என்ற ரோமானிய அரசர் வெளியிட்டவை. இக்காசுகளின் முன்பக்கம் அரசரின் தலைப்பகுதியும் பெயரும், பின்பக்கம் "வெற்றித் தேவதை" யின் உருவமும் காணப்படுகின்றன (ஒளிப்படம் 5). ரோமானிய வேலைப்பாடு கொண்ட மிக நேர்த்தியான ஒரு தங்க மோதிரத்தில் பாயும் சிங்கத்தின் மேல் ஒரு வீரன் சவாரி செய்யும் நிலையில் உருவம் வனையப்பட்டுள்ளது (ஒளிப்படம் 6). சிங்கத்தின் உருவம் செயற்கையாக உள்ளது. வீரனின் உடையும் தொப்பியும் கிரேக்க அல்லது ரோமானியச் சாயலை உடையன என்பது உறுதி.

செய்தி மூலம் : பேராசிரியர் கே.வி. இராமன்
14.3.93 இந்து நாளிதழில் வெளியிட்ட
"Roman Jewellery and coins from Karur" என்ற கட்டுரை

திரட்டியவர் : பா. ஜெயக்குமார்,
தஞ்சாவூர்.

## 31.2 சித்தன்னவாசலில் சில புதிய கல்வெட்டுக்கள்

அண்மையில் புதுக்கோட்டை மாவட்டம் சித்தன்னவாசல் மலையில் கி.பி 5 அல்லது 6 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த தமிழ்க் கல்வெட்டுக்கள் இந்தியத் தொல்லியல் அளவீட்டுத் துறையின் கல்வெட்டுப் பிரிவினரால் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இவை ஏற்கெனவே யாவரும் அறிந்துள்ள பிராமிக் கல்வெட்டுக் குகைக்குச் செல்லும் வழியில் இடது புறத்தில் ஒரு கற்பிளவில் பொறிக்கப்பட்டுள்ளன. பெரும்பாலும் ஆட்பெயர்களாக உள்ள இவை பல காலங்களில் வெட்டப்பட்டவையாகத் தெரிகின்றன. எழுத்துக்கள் பிராமி (தமிழி) நிலையிலிருந்து வட்டெழுத்தாக மாறும் நிலையில் உள்ளன. தொடக்க நிலை வட்டெழுத்துக்களின் அருமை கருதி இக்கல்வெட்டுக்களில் தெளிவாகப் படிக்கக் கூடிய சில பகுதிகள் மட்டும் "கண்படி" யெடுக்கப்பட்டுக் கீழே தரப்படுகின்றன.

சிறு செண்ணன்



பெந்தோடன்



தகவல்: கா. ராஜன்
தஞ்சாவூர்

# 32. புதிய வெளியீடுகள்

32.1 சி.க. சிற்றம்பலம், பண்டைய தமிழகம்.

(யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம், 1991) பக்கம் 340, படங்களுடன்.

யாழ்ப்பாணப் பல்கலைக் கழகத்தின் வெளியீடான இந்த நூல் தமிழ் நாகரிகம் எப்படி மலர்ந்தது என்பதை விளக்குவதை முக்கியக் குறிக்கோளாகக் கொண்டுள்ளது. இந்த வகையில் தமிழில் வெளியாகியுள்ள நூல்களை விரல்விட்டு எண்ணிடலாம். இதுவரை தொல்லியல் ஆய்வுகளில் கண்டு பிடிக்கப்பட்டுள்ள செய்திகளையெல்லாம் நிரல்படத் தொகுத்துச் சில புதிய விளக்கங்களுடன் ஒரு முழுமையான நூலைத் தந்துள்ள ஆசிரியர் கலாநிதி சிற்றம்பலம் பாராட்டுக்குரியவர். நூற்பட்டியலில் வெளியாகியுள்ள நூல்கள், கட்டுரைகள் யாவையும் தொகுத்துத் தந்துள்ளார். நூலின் கருத்தோட்டத்தை மூன்று பிரிவுகளாகக் கொள்ளலாம். முதல் நான்கு அத்தியாயங்களில் கற்காலங்கள் அதாவது கற்கருவிகள் பயன்படுத்திய காலங்களான பழைய இடை, புதிய கற்காலங்கள் பற்றியும் அடுத்த நான்கு அத்தியாயங்களில் பெருங்கற்காலம் பற்றியும் கடைசி மூன்றில் வரலாற்றுக் காலத்தைப் பற்றியும் ஆராயப் படுகிறது. ஒவ்வொரு காலகட்டத்தைப் பற்றியும் கிடைத்துள்ள தடையங்களைத் தொகுத்துக் கூறி அக்கால கட்டத்தில் வாழ்ந்த மக்களினங்கள் பற்றியும் அவர்தம் பண்பாட்டு நிலை பற்றியும் ஆராய்கிறார். காட்டாக, இடைக்கற்கால மக்கள் இலங்கையில் காணப்படும் வெட்டோயிடு (Veddoid) இனச்சார்புடையவர் எனவும் புதிய கற்கால மக்கள் திராவிட மொழிக் குடும்பத்தைச் சேர்ந்தவர் எனவும் கருத்து சொல்லப்படுகிறது.

பெருங்கற்காலம் என்பது பெரிய கற்களைக் கொண்டு ஈமச் சின்னங்கள் எழுப்பிய காலம், ஆகவே இதனைப் பெருங்கற்படைக் காலம், அல்லது பெருங்கல் ஈமப்படைக் காலம் என்பதே சரி. இக்காலம் பற்றி நிறைய செய்திகள் தரப்பட்டுள்ளன. இது கி.மு. 1000 ஆண்டளவில் தமிழகத்தில் தொடங்கியது எனவும் இக்காலத்துக்கும் இதற்கு முந்தைய புதிய

கற்காலத்துக்கும் இடையே நிலவிய பண்பாட்டுத் தொடர்ச்சி நெருக்கமானது என்றும் இவ்விரு நிலையிலும் வாழ்ந்த முக்கிய இனம் திராவிட இனம் எனவும் இக் காலத்தில் குழுக்கள் ஆட்சி மலர்ந்து அடுத்துவரும் மூவேந்தர் ஆட்சிக்கு அடிப்படையாக அமைந்தது எனவும் கருத்துரைக்கிறார். அத்தியாயம் 8இல் பெருங்கற்கால மக்களைப் பற்றிப் பேசும்போது சிந்துவெளி நாகரிக மக்கள் திராவிட மொழி பேசியவர்கள் என்பதையும் வற்புறுத்துகிறார்.

வரலாற்றுக் காலம் தமிழ்நாட்டைப் பொறுத்தவரை கி.மு. 500 முதல் கணக்கிட வேண்டும். ஏனெனில் அப்போதே இங்கு தமிழ் பிராமி அல்லது திராவிட எழுத்துக்கள் வழக்குக்கு வந்துவிட்டன என்கிறார். இவ்வெழுத்து முறை அசோக பிராமிக்கு முற்பட்டது என்ற கருத்தை ஆசிரியர் வற்புறுத்துகிறார். இக்காலம் பற்றிச் சங்க இலக்கியங்களை வைத்து விளக்கப்படுகிறது. இக்காலந் தொடர்பாக அரிக்கமேடு, கொற்கை, உறையூர், காஞ்சிபுரம், காவிரிப்பூம்பட்டினம் போன்ற ஊர்களில் நடந்த அகழாய்வுச் சான்றுகளையும் சுட்டுகிறார். தமிழ்நாட்டில் அகழாய்வு மேலும் பரந்த அளவில் மேற்கொள்ளப்பட வேண்டும் என்ற ஆசிரியரின் கருத்து வரவேற்கப்பட வேண்டிய ஒன்று; ஆயினும் அதற்குச் செவி சாய்ப்பார் யார் ?

ஆசிரியரின் மொழிநடை இலங்கைச் சாயல் பெற்றிருந்தாலும் யாவரும் விளங்கிக் கொள்வதாகவே உள்ளது. சில இடப்பெயர்கள் ஆங்கிலத்திலிருந்து பெற்றதன் வாயிலாகத் தவறுபட உச்சரிக்கப்பட்டுள்ளன. எ.டு: மெஞ்ஞானபுரம் மேகனாபுரம் (ப.24) என்றும், ஜவ்வாது (மலை) யாவடி (ப.35) என்றும், கல்லுப்பட்டி, கள்ளுப்பட்டி (ப.112) என்றும் கொடுக்கப்பட்டுள்ளமை. ஆங்கிலச் சொற்களைத் தமிழ்ப்படுத்துவதில் சிறிது எச்சரிக்கையாக இருக்க வேண்டும். ஹைமண்டோவ் (Heimendorf) என்பதை கைமண்டோவ் என்று எழுதுவதைச் சீரணிக்க முடியவில்லை. “ஹை” பயன்படுத்துவது கூச்சமாக இருந்தால் அதற்கு மாறாக “ஐ” (ஐமண்டோவ்) பயன்படுத்தலாம்.

புதிய கற்காலம் பெருங்கற்காலம் இவற்றுக் கிடையேயுள்ள தொடர்பு, பெருங்கற்காலத் தொடக்கம், தமிழ் பிராமியின் தொடக்கம் போன்றவற்றைப் பற்றிய ஆசிரியரின் கருத்துக்கள் பற்றிக் கேள்விகள் நிச்சயம் எழும். ஆசிரியரே இவற்றை முடிவாகத் தீர்மானிக்க மேலும் புதிய தடையங்களைப் பெற்று ஆராயவேண்டும் என்று வற்புறுத்தி யுள்ளார். இப்போதைக்கு அவை கருதுகோள் (hypothesis) என்றே கொள்ள வேண்டும். எப்படியும் தமிழ் நாகரிகத் தொடக்கம் பற்றிய புதிய சிந்தனைக்கு இந்த நூல் கோடிகாட்டும் என்று நம்பலாம்.

எ. சுப்பராயலு

32.2. N. Karashima, *Towards a New Formation : South Indian Society Under Vijayanagar Rule*. (OUP, Delhi ,1992).

ஆசிரியர் கடந்த பத்து ஆண்டுகளாக விஜயநகர ஆட்சிகாலத்தில் தமிழ்நாட்டு அரசியல், பொருளாதார, சமுதாய வரலாறு பற்றிக் கல்வெட்டுச் செய்திகளைப் புள்ளியியல் அடிப்படையில் ஆராய்ந்து வெளியிட்ட பல கட்டுரைகளின் தொகுப்பு. 1984இல் இவர் சோழர் காலத் தமிழ்நாட்டைப் பற்றி வெளியிட்ட South Indian History and Society என்ற நூலின் தொடர்ச்சி இது. 14-17 ஆம் நூற்றாண்டுகளில் தமிழ்நாட்டில் ஏற்பட்ட சமுதாய, பொருளாதார மாற்றங்களைப் பற்றிச் சிறப்பாக ஆராயப்பட்டுள்ளது.

*32.3 Richard Soloman, "Epigraphic Remains of Indian Traders in Egypt", Journal of the American Oriental Society , vol, 111:4 (Oct-Dec. 1991).*

கி.மு. கி.பி. முதலிரண்டு நூற்றாண்டுகளில் தென்னிந்தி யாவிற்கும் ரோமானியப் பேரரசுக்கும் நடந்து வந்த கடல்வழி வாணிகம் பற்றி அண்மையில் கிடைத்த சில புதிய அகழாய்வுத் தடையங்களை விளக்குகிறது இக் கட்டுரை. எகிப்து நாட்டில் கெய்ரோ நகர அருங்காட்சியகத்தில் காட்சிப்படுத்தப்பட்டுள்ள ஓர் ஓட்டில் மையில் எழுதப்பட்ட ஒரு பிராகிருதக் கல்வெட்டு உள்ளது. இது பல ஆண்டுகளாகச் சிலருக்குத் தெரிந்திருந்தாலும்

இதுவரை சரியாகப் படிக்கப் படவில்லை. இதில் மூறு வாணிகர்களின் பெயர்களும் எண்ணெய், இறைச்சி, மது இவற்றைப் பற்றிய குறிப்பும் வருகிறது. சிதைந்த நிலையில் கல்வெட்டு முழுமையாகக் கிடைக்காததால் சரக்குப் பட்டியல் தெளிவாக இல்லை. வாணிகர்களின் பெயர்கள் தென்னிந்தியச் சாயல் கொண்டுள்ளன என்பது ஆசிரியர் கருத்து. இக்கல்வெட்டு ஓடு குசெயிர் அல்-காதிம் (Quseir al-Qadim) என்ற செங்கடல் துறைமுகத்திலிருந்து கொண்டு வரப் பட்டதாகத் தெரிகிறது. இதே துறைமுக ஊரில் அகழாய்வில் கிடைத்த ஓர் ஓட்டில் பிராமி எழுத்தில் பொறிக்கப்பட்ட "கணன் சாதன்" என்ற கி.பி. 2-3ஆம் நூற்றாண்டுத் தமிழ்ப் பெயர்கள் இருந்தன என்ற செய்தி சில ஆண்டுகளுக்கு முன்பே வெளியாகியுள்ளது.

இக்கட்டுரை ஆசிரியர் கீழ்க்கண்டவாறு முடிக்கிறார்:

"எகிப்தில் இந்திய வாணிகர்களின் ஒரு சில கல்வெட்டுக்களைக் காண்கிறோம். இவை சிலவாக இருப்பினும் கி.பி. இரண்டாம் நூற்றாண்டளவில் ரோமானியப் பேரரசுக்கும் தென்னிந்தியாவுக்கும் இடையே நடைபெற்ற விறுவிறுப்பான வாணிகத்துக்குப் போதிய ஆதாரமாக அமைகின்றன. இந்திய வரலாற்று நோக்கில் எகிப்தில் மேலும் ஆய்வுகள் செய்தால் இதுவரை தென்படாத பல இந்தியச் சான்றுகள் கிடைக்கக் கூடும் என்பது நிச்சயம்".

32.4 Studies in South Indian Coins (தென் இந்திய நாணயங்களில் ஆய்வுகள்) மூன்றாம் தொகுதி; பதிப்பாசிரியர்: முனைவர் ஏ.வி. நரசிம்மமூர்த்தி (நியூ இரா பப்ளிகேஷன்ஸ், சென்னை, 1993)

தென் இந்திய நாணய இயல் கழகத்தின் மூன்றாவது வெளியீடான இந்நூலில் 23 ஆய்வுக் கட்டுரைகள் தொகுத்து அளிக்கப்பட்டுள்ளன. தமிழக நாணய இயல் சார்ந்த ஆய்வுக் கட்டுரைகள் பலவற்றை இந்நூல் கொண்டுள்ளது சிறப்பாகும். மத்திய தரைக்கடல் நாடுகளுடன் தமிழகம் கொண்டிருந்த பழமைத் தொடர்புகளை விளக்கும் கரூர், அழகன்குளம் ஆகிய இடங்களில் கிடைத்த நாணயங்கள், அரிக்கமேட்டு அகழாய்வில் கிட்டிய சங்ககாலச் சோழர் காசின் சிறப்புகள், கல்வெட்டுச் செய்திகள் வாயிலாக அறியப்படும் நாணய

முறைகள் தரங்கம்பாடியில் கிடைத்த டேனிஷ் காசுகள், புதுக்கோட்டைச் செம்புப் பதக்கம் ஆனந்தரங்கம் பிள்ளைக்கும் நாணயவியலுக்கும் உள்ள தொடர்பு போன்று பல கட்டுரைகள் உள்ளன.

கும்பளத்தில் (கேரளா) கிடைத்த ரோமானியக் காசுகள் பற்றி பீடர் பெர்கஸ் தம் ஆய்வுக் கட்டுரையில் சிறப்பான பல செய்திகளைத் தருகிறார். இவை தவிர ஆந்திரப் பகுதியை ஆண்ட சக மன்னர்களின் காசுகள், சன்னதியில் கிடைத்த சாதவாகன மன்னர்களின் காசுகள் பற்றிய இரு கட்டுரைகள் உள்ளன. பண்டைத் தமிழ் நாட்டுக் காசுகளில் உள்ள உலோகங்களின் மூலக் கூறுகள் பற்றி வி. ஜெயராஜும் சிறப்பான செய்திகளைத் தருகிறார்.

ப.சண்முகம்

32.5 சு. இராசாராம், **வீரசோழிய இலக்கணக் கோட்பாடு**, (இராகவேந்திரா, நாகர்கோவில், 1992), பக்கங்கள் 329.

கி.பி. 1100 ஐ ஒட்டி எழுதப்பட்ட இலக்கண நூலான வீரசோழியத்தின் மொழியியல் கோட்பாடுகளை ஆய்வதை முக்கிய நோக்கமாகக் கொண்ட இந்நூல் வரலாற்றாளர் களுக்கும் பயன்படுவதாக உள்ளது. இந்நூல் எழுந்த காலத்தில் ஆட்சி செய்த சோழப் பேரரசின் மொழிக் கொள்கை, அப்பேரரசின் எல்லைக்குள்ளே வழங்கிய பல்வேறு மொழிகளின் வளர்ச்சிநிலை ஆகியன பற்றி வைத்துள்ள கருத்துக்கள் சிந்திக்கத் தூண்டுபவை. அன்று தமிழுக்கும் வடமொழிக்கும் இருந்த உறவுநிலை பற்றிச் சிறப்பாக ஆராயப்பட்டுள்ளது.

32.6 செ. இராசு, கொங்குநாட்டுச் சமுதாய ஆவணங்கள் (தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1992), பக்கங்கள் 486.

இந்நூல் பதினாறு, பதினேழு, பதினெட்டாம் நூற்றாண்டுக் கொங்கு நாட்டைச் சேர்ந்த ஓலை, செப்பேடு மற்றும் காகித ஆவணங்கள் எண்பது அடங்கிய தொகுதி. கொங்கு மாவட்டங்களில் பல இடங்களிலிருந்து தொகுக்கப்பட்ட இவை அக்காலக் கொங்குச் சமுதாயத்தைப் பற்றிய பல புதிய செய்திகளை தருகின்றன.

1. ம.சா. அறிவுடைநம்பி
விரிவுரையாளர்
அரிய காகிதக் கையெழுத்துச் சுவடித்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் 613 005

2. சு. இராசகோபால்
கல்வெட்டியல் ஆய்வாளர்
தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை
திருமலை நாயக்கர் மகால்
மதுரை 625 001

3. சு. இராசவேலு
முதுநிலைக் கல்வெட்டாய்வாளர்
தென்மண்டலக் கல்வெட்டியல் பிரிவு
இந்தியத் தொல்லியல் அளவீட்டுத் துறை
கோட்டை, சென்னை 600 009

4. செ. இராசு
இணைப் பேராசிரியர்
கல்வெட்டியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் 613 005

5. பி. இராமமூர்த்தி
ஆணையாளர்
ஊராட்சி ஒன்றியம்
விராலிமலை 621 316

6. அ. இராசேந்திரன்
காப்பாட்சியர்
டேனிசு கோட்டை அருங்காட்சியகம்
தரங்கம்பாடி 609 307

7. கரு. இராசேந்திரன்
மேலப்பனையூர் (அஞ்சல்)
விரையாச்சிலை (வழி) 622 420
புதுக்கோட்டை மாவட்டம்

8. சீ. இலட்சுமணன்
புதுக் குடியிருப்பு
சிங்கம்புணரி 624 502

9. து. கங்காதரன்
விரிவுரையாளர்
பழனியாண்டவர் கலைக் கல்லூரி
பழனி 624 601

10. எஸ்.எம். கமால்
21, ஈசா பள்ளிவாசல் தெரு
இராமநாதபுரம் 623 505

11. இரா.ப. கருணானந்தன்
காப்பாட்சியர், அகழ்வைப்பகம்
தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை
17, சத்தியமூர்த்தி சாலை
இராம் நகர் கோயமுத்தூர் 641 009

12. தே. கோபாலன்
தொல்லியல் அலுவலர்
தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை
சி.பி.டி வளாகம் தரமணி
சென்னை 600 113

13. கொடுமுடி ச. சண்முகன்
முதல்வர்
அரசினர் கட்டிடக் கலை, சிற்பக் கல்லூரி
மாமல்லபுரம் 603 104

14. ப. சண்முகம்
இணைப் பேராசிரியர்
பழம் வரலாறு மற்றும் தொல்லியல் துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை 600 005

15. த. சந்திரக்குமார்
இணைப் பேராசிரியர்
சிற்பத்துறை
தமிழ்ப் பல்கலைக் கழகம்
தஞ்சாவூர் 613 005

16. எ. சுப்பராயலு
பேராசிரியர்
கல்வெட்டியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் 613 005

17. சூ. சுவாமிநாதன்
முதுநிலைக் கல்வெட்டாய்வாளர்
கல்வெட்டியல் இயக்குநர் அலுவலகம்
இந்தியத் தொல்லியல் அளவீட்டுத் துறை
மைசூர் 570 005

18. எஸ். நாகராஜ்
மருத்துவர்
எ16/4 டவுன்ஸ் வளாகம்
புதிய நத்தம் சாலை
மதுரை 625 002

19. இல. தியாகராசன்
முதுநிலை வரலாற்று விரிவுரையாளர்
அரசினர் கலைக் கல்லூரி
அரியலூர் 621 713

20. (திருமதி) வள்ளி சொக்கலிங்கம்
முதுநிலை விரிவுரையாளர்
இராமசாமி தமிழ்க் கல்லூரி
காரைக்குடி 623 001

21. வே. வேதாச்சலம்
காப்பாட்சியர்
தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை
திருமலை நாயக்கர் மகால்
மதுரை 625 001

22. கா. இராஜன்
விரிவுரையாளர்
கல்வெட்டியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் 613 005

23. நா. இராஜேந்திரன்
விரிவுரையாளர்
எதிர்காலவியல் துறை
பாரதிராசன் பல்கலைக் கழகம்
திருச்சிராப்பள்ளி 620 024

24. பா. ஜெயக்குமார்
ஆய்வாளர்
கல்வெட்டியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் 613 005

25. இர. ஜெயராமன்
கல்வெட்டாய்வாளர்
தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை
தஞ்சாவூர் 613 001

## அஞ்சலி

## கே.ஆர். சீனிவாசன்

கடந்த அரை நூற்றாண்டுக்கு மேலாக இந்தியத் தொல்லியல் குடும்பத்தின் மூத்த தலைவராக எல்லோராலும் மதித்துப் போற்றப்பட்ட திரு கே.ஆர். சீனிவாசன் (கூத்தூர் ராமகிருஷ்ணன் சீனிவாசன்)அவர்கள் 1992 நவம்பர் 30 அன்று இயற்கை யெய்தியது ஈடு செய்யமுடியாத பேரிழப்பாகும். புதுக்கோட்டை சமஸ்தானத்தில் தம் இளம்வயதில் தொல்லியல் பணிக்கு அறிமுகமான இவர் பின்பு இந்தியத் தொல்லியல் அளவீட்டுத் துறையில் (Archaeological Survey of India) பலபதவிகள் வகித்து இறுதியில் அதன் துணை மேலாண் இயக்குநராக இருந்து ஓய்வு பெற்றார். அலுவலக முறையில் ஓய்வு பெற்ற பிறகும்கடந்த இருபது ஆண்டுகள் தொல்லியல் களத்தில் சுறுசுறுப்பாக இயங்கி இளம் தலைமுறையினருக்கு வழிகாட்டியாக இருந்து வந்த இவருக்கு இந்திய அரசு 1991 இல் பத்மபூஷன் விருதளித்துப் பெருமைபடுத்தியது. இந்தியத் தொல்லியல் மற்றும் பழம் வரலாற்றில் எல்லாத் துறைகளிலும் ஈடுபாடு கொண்ட இவர் தென்னிந்தியக் கட்டிட, சிற்பக் கலைகளிலும் பெருங்கற்படைக் காலத் தொல்லியலிலும் சிறப்பாக ஆய்வுகள் செய்து பல கட்டுரைகளும், நூல்களும் எழுதியுள்ளார். அவர் எழுதி வைத்துள்ள சில நூல்கள் இன்னும் அச்சேறவில்லை என்பது வருத்தப்பட வேண்டிய செய்தி.

## எஸ்.பி. கந்தசாமி

தமிழகத் தொல்லியல் கழகத்தின் ஓர் ஆர்வமுள்ள வாழ்நாள் உறுப்பினராக விளங்கிய முனைவர் எஸ்.பி. கந்தசாமி அண்மையில் காலமானது கழகத்துக்குப் பேரிழப்பாகும். கடந்த பல ஆண்டுகளாக பொள்ளாச்சி என்.ஜி. மகாலிங்கம் கல்லூரியில் வரலாற்றுத் துறைத் தலைவராகப் பணிபுரிந்து வந்த அவர் கொங்குவேளாளர் வரலாறு பற்றி சிறந்த ஆய்வுக் கட்டுரைகள் எழுதியுள்ளார்.

## ஆவணம் இதழில் பங்கேற்போர் நினைவுக்கு

தமிழக வரலாற்றை வளப்படுத்தும் அடிப்படைச் சான்றுகள் குறித்துக் கருத்துப் பரிமாற்றம் செய்து கொள்ளல் தமிழகத் தொல்லியல் கழகத்தின் முதன்மையான குறிக்கோள். அந்தக் குறிக்கோளை அடையும் வகையில் கீழ்க்குறிப்பிட்ட பரந்த தலைப்புக்களை ஒட்டிக் கட்டுரைகளும் குறிப்புக்களும் வரவேற்கப்படுகின்றன.

1. புதியனவாகக் கண்டுபிடிக்கப்பட்ட தொல்பொருள்கள், தொன்மையான ஊரிருக்கைச் சின்னங்கள், கலைப் பொருள்கள், காசுகள், கல்வெட்டுக்கள், செம்பு அல்லது ஓலைப் பட்டயங்கள், சுவடிகள் ஆகியன பற்றிய குறிப்புக்கள்.
2. கல்வெட்டு முதலிய எழுத்தாவணங்களானால் அவற்றின் மூல பாடம், மைப்படி அல்லது கண்படி (eye copy).
3. மூலச்சான்றுகளை அடிப்படையாக வைத்து எழுதப்பட்ட வரலாற்றுக் கட்டுரைகள், திறனாய்வுகள்.
4. புதிய நூல்கள், கட்டுரைகள் பற்றிய மதிப்பீடு அல்லது குறிப்புக்கள்.
5. நாளேடுகளில் வந்த அரிய வரலாற்றுச் செய்திகளின் திரட்டு.
6. கருத்தரங்க நிகழ்ச்சிகள் பற்றிய செய்தித் திரட்டு.
7. மேற்கண்ட யாவற்றுக்கும் ஒளிப்படமும் வரைபடமும் அனுப்பலாம்.

கிரந்த எழுத்துக்களை எழுத்துப் பெயர்ப்பு செய்ய ஆவணம் வழங்கிவரும் முறையைப் பின்பற்றலாம் அல்லது மூல எழுத்துக்களை அப்படியே மாற்றாமல் தரலாம். எல்லா வரைவுகளும் தெளிவாகவும் சுருக்கமாகவும் தட்டச்சில் இருபடிகள் எ. சுப்பராயலு, "ஆவணம்" பதிப்பாசிரியர் மே/பா. கல்வெட்டியல்துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர் 613 005 என்ற முகவரிக்கு அனுப்ப வேண்டும்.

உறுப்பினர் கட்டணம்

தமிழகத் தொல்லியல் கழக வாழ்நாள் / ஆண்டு உறுப்பினர் கட்டணத்தைக் "கா. ராஜன், பொருளாளர், த.தொ.க. மே/பா கல்வெட்டியல் துறை, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர் 613 005 என்ற முகவரிக்கு அனுப்ப வேண்டும். காசோலை/வரைவோலைகள் "தமிழகத் தொல்லியல் கழகம்" *(TAMIZHAGA TOLLIYAL KAZHAGAM)* என்ற பெயரில் இருக்க வேண்டும்.

